# புலம்பெயர் தமிழ் மாணவர் கற்கை நூல்


| | | |
|---|---|---|
| நூலாக்கம் | : | செல்லர் தெய்வேந்திரன் |
| | | ஆயிலியம் நாகலிங்கம் |
| | | தங்கேஸ்வரி கெங்காதரன் |
| | | விக்னா பாக்கியநாதன் |
| | | ஜெகதீஷன் ஜெய்கிஷன் |
| | | கௌசலாதேவி லங்கேஸ்வரன் |
| | | சிவநேசன் அரவிந்த் |
| | | அருள்நிதி இராதாகிருஷ்ணன் |
| | | சிவபாதசுந்தரம் இளவழகன் |
| | | விஜயா செல்வநாயகம் |
| | | மல்லீஸ்வரி ஆதவன் |
| | | லதா தவராஜேஸ்வரன் |
| | | சர்வேஸ்வரி சோமசுந்தரம் |
| | | சின்னத்துரை கமலநாதன் |
| நூல் வடிவமைப்பு | : | துரைசிங்கம் பிரபாகரன் |
| செய்திட்ட நிறைவேற்றுநர் | : | நகுலேஸ்வரி அரியரத்தினம் |





published by

TAMIL EDUCATION DEVELOPMENT COUNCIL

1st Published 2013





Printed in France

# முன்னுரை

புலம் பெயர்ந்து வாழும் எம் தமிழ்ப் பெருங்குடியின் நிகரிலா அன்புச் செல்வங்களே!

நீங்கள் மாணவராய், பெற்றோராய், ஆசிரியர்களாய் இன்னும் பல்வேறு வழிகளிலே தமிழர் கல்வி மேம்பாட்டுப் பேரவையினுடன் தொடர்பு உடையவர்களாக உள்ளீர்கள்.

உங்களுடன் தாய்மொழிக் கல்வித் தொடர்பில் பேசுவதில் தமிழர் கல்விமேம்பாட்டுப் பேரவை பெருமை கொள்கிறது. புலம்பெயர்ந்து வாழும் நீங்கள் கடல் கடந்தாலும் உங்களது பண்பாட்டுக் கோலங்களையும் இனப்பற்றையும் மொழிப்பற்றையும் கடந்து விடாது போற்றுகின்ற உங்களது பற்றைக்கண்டு, உங்களது இனமொழி நாட்டங்களைச் செழுமையுறச் செய்வதற்காக எம்மால் முடிந்தவரை உருவாக்கப்பட்டதே இந்நூற்றொடராகும்.

இந்நூல்களிலே எமது எதிர்கால ஆக்கர்களாகிய இளஞ்சிறார்கள் எத்தகைய அறிவைத் தமது மொழிக்கற்கையூடாகப் பெறவேண்டும், எவ்வாறு அவர்களை நற்றமிழர்களாக இனவெல்லைக்குள் கொண்டு வரக்கூடிய அறிவைப் பெருக்க வேண்டும் என்று எண்ணித் துணிந்த பாடங்களையே அலகுகளாகக் கொண்டு, இந்நூல் வெளிவருகிறது.

ஒருவர் தனது தாய்மொழியை அதற்குரிய விழுமியங்களூடாகவே கற்க வேண்டும், அப்போதுதான் கற்பவரின் மனதில் தாய்மொழி உணர்வு வலுப்பெறும். தன்மொழியில் விரவியுள்ள பிறமொழிச் சொற்களுடன் கற்பது, தாய்மொழி வழங்கும் இறைமையுணர்வு அகத்தைச் சென்றடையாது தடுக்கும் தீங்கை விளைக்கும்.

எனவே நாம் அறிந்தவரையிலும், அறிஞர்களின் மதியுரைகளூடாகவும் எம்மால் இயன்றவரை இனிய செந்தமிழில் இந்நூல் ஆக்கப்பட்டுள்ளது என்றே நம்புகின்றோம். தமிழ்ச் செல்வங்கள் இந்நூலைக் கருத்தூன்றிக் கற்றுத்தேறுமாறு அன்புடன் வேண்டுகின்றோம்.

**நகுலேசுவரி அரியரத்தினம்**
மேலாளர்
தமிழர் கல்வி மேம்பாட்டுப் பேரவை

# உள்நிரல்

பாடம் 1

# தமிழ் இலக்கிய வளம்

மிகத்தொன்மையான மொழிகளில் தமிழும் ஒன்று. உலகின் முதல் மொழி தமிழே என்று மொழிஞாயிறு தேவநேயப்பாவாணர் என்ற மொழியியல் அறிஞர் நிறுவியுள்ளார். தமிழர் தம் தாய்மொழியை அதன் இனிமை கருதித் தேன்தமிழ், தீந்தமிழ் என்று போற்றுவர். பைந்தமிழ் எனப் பெயரிட்டு தமிழின் இளமைத் தன்மையைச் சுட்டுவர். செம்மையான மொழிவளத்தைக் கண்டு செந்தமிழ் என்று குறிப்பிட்டனர்.

தமிழை முத்தமிழ் எனவும் சிறப்பித்துக் கூறுவர். முத்தமிழ் என்றால் இயல் இசை நாடகம் என விரியும். ஒரு மொழியில் இத்தகு மூன்று பகுப்பு இருப்பதும் அம்மூன்றுக்கும் இலக்கணம் அமைந்திருப்பதும் தமிழுக்கு உரிய தனிச்சிறப்பாகும்.

இயல் : இயல் என்பது இயற்றமிழ். இது பாடலாலும் (செய்யுள்) உரை நடையாலும் ஆக்கப்பட்டுள்ள இலக்கியங்களைக் குறிக்கும். இயற்றமிழ் தம் கருத்துகளை வெளியிடவும் பிறர் வெளியிடும் கருத்துகளை அறியவும் உதவுகிறது.

இசை : இசைத்தமிழ் என்பது இசைப்பாடல்களைக் குறிக்கும். இசை உள்ளத்தை உருக்கி நெகிழச் செய்வது.

நாடகம் : நாடகத்தமிழ் இயலும் இசையும் கலந்த நடிப்பாலும் பேச்சாலும் கருத்துகளைப் புலப்படுத்துவது. இது மக்களின் கண்ணெதிரே மெய்ப் பாடுகளால் காட்சிகளைக் காட்டி அவர்களை நல்வழிப்படுத்தி, உள்ளத்தில் கருத்துகளை எளிதாகப் பதிய வைக்கிறது.

தமிழ்ச்சொல் ஒரு பொருளின் பெயரைச் சுட்டிக்காட்டுவதுடன், அதன் பல்வேறு பருவங்களையும் உணர்த்தும். எடுத்துக்காட்டாக, இலையைக் குறிக்கும் சொற்களைக் காணலாம்.

| | | |
|---|---|---|
| கொழுந்து | : | புதிதாகத் தோன்றிய நிலையைச் சுட்டும். |
| தளிர் | : | சற்று வளர்ந்த மென்மையான தன்மையைக் குறிக்கும். |
| இலை | : | நன்கு வளர்ச்சியுற்ற பருவத்தைக் காட்டும். |

பழுப்பு : பழுத்துவிட்ட இலையின் பருவமாகும்.
சருகு : இலை காய்ந்து விட்ட நிலையைக் குறிக்கும்.

இது போன்று வேறு பொருட்களைச் சுட்டும் பொருட்பெயர்த் தொகுதிகள் ஒரு பொருளின் பல பருவங்களைக் குறிப்பனவாக உள்ளன. தமிழில் உள்ள சொற்கள் உருவம், பருவம் ஆகிய இரண்டையும் ஒருங்கே காட்டும் தன்மை வாய்ந்தவை. இதுவும் தமிழ்மொழிக்குரிய சிறப்பாகும்.

தமிழ்மக்களில் பலர் சிறந்த புலமை பெற்றுத் திகழ்ந்தனர். அவர்கள் பல சிறந்த நூல்களைப் படைத்தனர். அவற்றின் மூலம் உயர்ந்த கருத்துகளைக் கூறினர். தமிழ் இலக்கியம் சிறப்பு மிக்கது. உயர்ந்த கருத்துகளை அழகுபடக் கூறுவது. தமிழர் உலகமக்கள் அனைவரையும் உறவினராகக் கொண்டனர் என்பதை 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற பாடல் வரியின்மூலம் கணியன் பூங்குன்றனார் உலகிற்கு உணர்த்தினார்.

மிகப் பண்டைய நாட்களிலேயே தமிழ்மொழியை வளர்ப்பதற்காகக் கழகங்களை அமைத்தனர். அவை முதற்கழகம், இடைக்கழகம், கடைக்கழகம் என அழைக்கப்படுகின்றன. இக்கழகங்களில் புலவர் பெருமக்கள் குழுமித் தமிழ் வளம் பெருக்கினர். முதல், இடைக் கழகங்கள் அமைந்திருந்த நிலங்கள் கடற்கோளினால் அழிவுற்றன. அதனால், அக்கழகக் காலங்களில் எழுதப்பட்ட நூல்கள் நமக்குக் கிடைக்கவில்லை. அவற்றுள் தப்பிப் பிழைத்தது தொல்காப்பியம் ஒன்றே. தொல்காப்பியம் மிகப் பழைமையான இலக்கணநூல். இற்றைக்கு மூவாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டது. 'ஒல்காப் பெரும் புகழ்த் தொல்காப்பியம்' என்று இந்நூல் பாராட்டுப் பெறுகிறது. இந்நூலை எழுதியவர் தொல்காப்பியர்.

இன்று எமக்குக் கிடைத்துள்ள கழகநூல்கள் கடைக்கழக நூல்களாகும். அவை பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க்கணக்கு என மூன்று பகுதிகளாக உள்ளன. இம்மூன்று பகுதிகளிலும் முப்பத்தாறு நூல்கள் உள்ளன.

பத்துப்பாட்டு, எட்டுத்தொகை நூல்களால் பண்டைய காலத்து மன்னரின் வீரம், ஆட்சிச்சிறப்பு, கொடை, மக்களின் வாழ்க்கைநிலை, பண்பாடு போன்றவற்றை அறியலாம். பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் பெரும்பாலும் அறநெறி இலக்கியங்களாகும். உலகப்பொதுமறை எனப் போற்றப்படுவதும், உலகமொழிகள் பலவற்றில் மொழிபெயர்க்கப் பெற்ற சிறப்புடையதுமான

திருக்குறள் பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்று.

இக்கழகநூல்கள் மட்டுமன்றி, கதை தழுவிய பெருங் காப்பியங்களும் தமிழில் உள்ளன. அவற்றை ஐம்பெருங்காப்பியங்கள் என அழைப்பர். இவற்றுடன் பல சமயங்களுக்குமான இறையன்பு இலக்கியங்களும் தமிழில் உள்ளன. தேவாரம், திருவாசகம், திருவருட்பா முதலானவை சைவநெறி சார்ந்த இறையன்பு இலக்கியங்களாகும். திவ்வியப் பிரபந்தம் வைணவநெறி சார்ந்தது. தேம்பாவணி, இரட்சணியயாத்திரீகம், இயேசுகாவியம் முதலானவை கிறித்தவநெறி இலக்கியங்கள். சீறாப்புராணம், குன்னக்குடி மச்தான்சாகிபு பாடல்கள் முதலானவை இசுலாமியநெறி இலக்கியங்களாகும். இந்த இறை இலக்கியங்களில் சைவநெறி இலக்கியங்கள் காலத்தால் பன்னூறு ஆண்டுகள் முற்பட்டவை. இவை தவிர தொண்ணூற்றாறு வகைச் சிற்றிலக்கியங்களும் உள்ளன. இவற்றுடன் நெடுங்கதை, சிறுகதை, நாடகம், புதுக்கவிதை என எண்ணற்ற இன்றைய இலக்கியங்களும் தமிழன்னைக்கு அழகு செய்து வருகின்றன.

## சொற்பிரிப்பு

| | | | |
|---|---|---|---|
| தீந்தமிழ் | = | தீம் | + தமிழ் |
| பைந்தமிழ் | = | பசுமை | + தமிழ் |
| செந்தமிழ் | = | செம்மை | + தமிழ் |

## ஐம்பெருங்காப்பியங்கள்:

| | | |
|---|---|---|
| சிலப்பதிகாரம் | - | இளங்கோவடிகள் |
| மணிமேகலை | - | சீர்த்தலைச்சாத்தனார் |
| குண்டலகேசி | - | நாதகுத்தனார் |
| சீவகசிந்தாமணி | - | திருத்தக்கதேவர் |
| வளையாபதி | - | எழுதியவர் பெயர் அறியப்படவில்லை. |

## கீழ்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.

1. இயற்றமிழ் குறிப்பது எது?
2. இலையின் பருவப் பெயர்களைத் தருக.
3. தமிழின் வளம் எவ்வாறு பெருக்கப்பட்டது?
4. தொல்காப்பியத்தை எப்படிக் கூறிப் பாராட்டுவர்?
5. பத்துப்பாட்டு, எட்டுத்தொகை நூல்கள் எக்கழகக் காலத்தில் தோன்றியவை?
6. பத்துப்பாட்டு, எட்டுத்தொகை நூல்களால் அறியக்கூடியது யாது?
7. கிறித்தவ, இசுலாமிய இலக்கியங்கள் நான்கு எழுதுக.
8. எத்தனை வகைச் சிற்றிலக்கியங்கள் தமிழில் உள்ளன?

## சொற்பொருள்

தீம் - இனிமை
நெகிழ்தல் - இளகுதல்
கேளிர் - உறவினர்

# மொழிவளம்

## தொடர்மொழிக்கு ஒரு சொல்

- அறிஞர்கள் கூடி எதிர்உரை செய்யும் அரங்கு - பட்டிமன்றம்
- நூலின் தொடக்கத்தில் அந்நூலை அறிமுகப்படுத்தி எழுதும் உரை - முன்னுரை
- நிகழ்ச்சியொன்றை மேடையேற்றுவதற்கு முன்பு நடத்திப் பார்ப்பது - ஒத்திகை
- ஒருவர் தான் கற்றுத்தேர்ந்த கலையைப் பலர் முன் முதன் முதலாக மேடையேற்றுவது - அரங்கேற்றம்
- புதிதாகச் செய்த தேர், கப்பல் போன்றவற்றை முதன்முதலாகப் பலரறிய ஓடவிடுதல் - வெள்ளோட்டம்
- நான்கு பக்கமும் நீரால் சூழப்பட்ட பகுதி - தீவு
- இருபத்தைந்தாவது ஆண்டு நிறைவில் எடுக்கப்படும் விழா - வெள்ளிவிழா
- ஐம்பதாவது ஆண்டு நிறைவில் எடுக்கப்படும் விழா - பொன்விழா
- அறுபதாவது ஆண்டு நிறைவில் எடுக்கப்படும் விழா - வைரவிழா
- எழுபத்தைந்தாவது ஆண்டு நிறைவில் எடுக்கப்படும் விழா - பவள விழா
- நூறாவது ஆண்டு நிறைவில் எடுக்கப்படும் விழா - நூற்றாண்டு விழா
- ஒரு நாட்டுக்கு வெளியில் இருந்து உணவு முதலிய எவ்வகைப் பொருளும் கிடையாதவாறு தடுத்து, அந்நாட்டைப் படைகொண்டு நாற்புறமுஞ் சூழ்ந்து நிற்றல் - முற்றுகை

## பயிற்சி

1. பின்வரும் சொற்களுக்குப் பொருள் விளக்கம் தருக.
   பவளவிழா, பட்டிமன்றம், வைரவிழா, ஒத்திகை
2. பின்வரும் சொற்களின் பொருள் புலப்படுமாறு, அவற்றைச் சொல்லியங்களில் அமைத்து எழுதுக.
   பொன்விழா, முன்னுரை, முற்றுகை, அரங்கேற்றம்

# இலக்கணம்

## சொல்லிய உறுப்புகள்

எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் ஆகிய சொல்லிய உறுப்புகள் அடைமொழிகளுடன் சேர்ந்து வருதல் பற்றி ஏழாம் ஆண்டில் கற்றுள்ளீர்கள். எழுவாய், செயப்படுபொருள் என்பன எப்போதும் பெயர்ச்சொற்களாகவே இருக்கும். இவற்றைச் சிறப்பிக்கும் அடைமொழிகளைப் பெயரடைகள் என்பர். பயனிலை பெரும்பாலும் வினைச்சொற்களாகவே இருக்கும். இதனைச் சிறப்பிக்கும் அடைமொழியை வினையடை என்பர்.

எ-கா:

1. பொன்னி சட்டை அணிந்திருந்தாள்.

| பொன்னி | சட்டை | அணிந்திருந்தாள். |
|---|---|---|
| எழுவாய் | செயப்படுபொருள் | பயனிலை |

2. அழகிய பொன்னி நீலச்சட்டையை நேர்த்தியாக அணிந்திருந்தாள்.

| அழகிய | நீல | நேர்த்தியாக |
|---|---|---|
| எழுவாய் அடைமொழி | செயப்படுபொருள் அடைமொழி | பயனிலைஅடைமொழி |
| (பெயரடை) | (பெயரடை) | (வினையடை) |

இனி, சொல்லியங்களில் எழுவாய், செயப்படுபொருள் என்பன வெளிப்படாமல் மறைந்து நிற்றல் பற்றிப் பார்ப்போம்.

### தோன்றா எழுவாய்

கீழேயுள்ள சொல்லியங்களில் எழுவாய் மறைந்திருக்கிறது.

எ-கா: 1. குடையை எடுத்துத் தா!
(நீ - தோன்றா எழுவாய்
'தா' என்னும் வினையின் எழுவாய் நீ )

2. விளக்கமாகக் கூறுங்கள்!
(நீங்கள் - தோன்றா எழுவாய்
'கூறுங்கள்' என்ற வினையின் எழுவாய் நீங்கள்)

## தோன்றாச் செயப்படுபொருள்

கீழேயுள்ள சொல்லியத்தில் செயப்படுபொருள் மறைந்திருக்கிறது.

எ-கா : அக்கா கணினியில் அழகாக வரைகிறார்.
எதை வரைகிறார்? படத்தை
(படத்தை - தோன்றாச் செயப்படுபொருள்)

## செயப்படுபொருள் குன்றிய வினை

கீழே உள்ள சொல்லியங்கள் செயப்படுபொருள் இல்லாதவை.

எ-கா: மழை பெய்து ஓய்ந்திருக்கிறது.
குழந்தைகள் இருவரும் ஆடிப்பாடி மகிழ்ந்தனர்.

ஓய்ந்திருக்கிறது, மகிழ்ந்தனர் என்ற வினைமுற்றுகள் செயப்படுபொருளை ஏற்காவினைகள். அவை செயப்படுபொருள் குன்றிய வினைகளாகும். இவை போன்று ஓடு, போ, வா, இரு, சிரி, அழு முதலிய வினையடியாகப் பிறக்கும் வினைமுற்றுகளும் செயப்படுபொருள் குன்றிய வினைகளாம்.

| எ-கா: வினையடி | வினைமுற்று | |
|---|---|---|
| ஓடு | ஓடினான் | - அவன் வீதியில் ஓடினான். |
| செல் | சென்றான் | - அவன் வீட்டுக்குச் சென்றான் |

## பயிற்சி

1. பின்வரும் சொல்லியங்களில் இடம்பெற்றுள்ள தோன்றா எழுவாயை எழுதுக.

அ . நண்பர்களுடன் விளையாட்டுத்திடலில் விளையாடினேன்.
ஆ . நாளை எனது வீட்டிற்கு வாருங்கள்.
இ . பள்ளிக்கு ஓட்டமும் நடையுமாகச் செல்கிறாள்.

2. பின்வரும் சொல்லியங்களில் இடம்பெற்றுள்ள தோன்றாச் செயப்படுபொருளை எழுதுக.

அ . குயிலி பாவமும் தாளமும் தவறாது ஆடினாள்.
ஆ . புலவன் இனிய குரலில் இசையோடு பாடிக்காட்டினான்
இ . இடையன் அரசவைக்குள் நுழைந்ததும் வணங்கினான்.

3. செயப்படுபொருள் குன்றிய மூன்று சொல்லியங்கள் எழுதுக.

பாடம் 2

# பண்டாரவன்னியன்

(காலம் 1785 - 1811)



கயிலைவன்னியனது ஆட்சிக்குப்பின் (1644 -1678) ஒரு நூற்றாண்டுக்கு மேலாக வன்னியில் இருபதிற்கும் மேற்பட்டோர் ஆட்சி புரிந்திருந்தாலும் வன்னியிற் புகழ்பூத்த ஆட்சியாகத் திகழ்ந்தது, குலசேகரம் வைரமுத்து என்னும் இயற்பெயர் கொண்ட பண்டாரவன்னியனது ஆட்சியேயாகும்.

ஆயிரத்து எழுநூற்று எண்பத்தைந்தாம் (1785) ஆண்டோடு தொடர்புடைய அவனது ஆட்சி பற்றிய செய்திகள், சில நூல்களிலிருந்து கிடைக்கப் பெற்றுள்ளன. இலங்கையின் வரலாற்றில் ஆங்கிலேயரை எதிர்த்துப் போராடிய இறுதி தமிழீழத் தமிழ்மன்னன் பண்டாரவன்னியன் என்ற உண்மை தமிழர் வரலாற்றுக்குப் பெருமை சேர்க்கிறது.

தமிழ்நாட்டில் ஆங்கிலேயரை எதிர்த்துப் போராடிய வீரபாண்டிய கட்டப்பொம்மன், மருதுபாண்டியன் ஆகியோர் போன்று இவனும் சிறந்த வீரனாகக் கருதப்படுகிறான். ஒல்லாந்தரையும், ஆங்கிலேயரையும் எதிர்த்துப் போராடிய தமிழீழத்தின் கடைசித் தமிழரசன் இவனே.

போர்த்துக்கேயரினால் வெற்றிலைக்கேணியில் அமைக்கப்பட்ட 'பெங்சூற்றர்' கோட்டையும், ஆனையிறவில் அமைக்கப்பட்ட 'பைல்' கோட்டையும் ஆங்கிலேயரிடமிருந்து பண்டாரவன்னியனது படையணிகளால் கைப்பற்றப்பட்டன. பண்டாரவன்னியனது இத்தகைய ஆற்றலும் உறுதியும், ஆங்கிலேயப் படைகளையும் படைத் தளபதிகளையும் வியப்பிற்கும் குழப்பத்திற்கும் உள்ளாக்கின. இக்குழப்பத்திலிருந்து மீளும் முன்னரே, ஆயிரத்து எண்ணூற்று மூன்றில் (1803) முல்லைத்தீவிற் கட்டப்பட்டுக் கொண்டிருந்த ஆங்கிலேயரின் கோட்டையினையும் (25.08.1803) பண்டாரவன்னியனின் படையணிகள் தாக்கி அழித்தன. அக்கோட்டையில் இருந்த மூன்று பீரங்கிகளையும் கைப்பற்றின. கோட்டையிலிருந்த ஆங்கிலேயப் படையினரும் கப்டன் வொன்றிபேக்கும் படகுகளில் யாழ்ப்பாணத்துக்குத் தப்பி ஓடினர். அதே வேளை கண்டியரசன் விக்கிரமராசசிங்கனுக்கு உதவியாக பண்டாரவன்னியன் படையணி ஒன்றை அனுப்பியிருந்தான்.

பண்டாரவன்னியனை எப்படியேனும் அழித்துவிடவேண்டுமென ஆங்கிலேயப்படை முனைந்தது. எனவே, மூன்று பெரும் படைப்பிரிவுகள் மன்னார், யாழ்ப்பாணம், திருகோணமலை ஆகிய மும்முனைகளில் இருந்தும் வன்னியை நோக்கி முன்னேறின. அப்படைகளின் மீது, குலசேகரமுதலியார் தலைமையிலான படையணி முல்லைத்தீவில் வைத்துத் தாக்குதல் தொடுத்தது. ஆனால், கடுஞ்சமரின் பின் ஆங்கிலேயப் படைகளிடம் தோற்றது. படைத்தலைவர் குலசேகரமுதலியாரும் இப்போரிலே கொல்லப்பட்டார். இவரின் மறைவு பண்டாரவன்னியனுக்குப் பேரிழப்பானது.

ஆயிரத்து எண்ணூற்று மூன்று ஒக்ரோபர் முப்பத்தோராம் நாள் (1803.10.31) எதிர்பாராத வகையில் ஆங்கிலேயப் படைகளைப் பண்டாரவன்னியன் எதிர்கொள்ள வேண்டி ஏற்பட்டது. இதனால், போருக்கு அணியமற்ற நிலையில் அவன் பனங்காமத்திற்குப் பின்வாங்கினான். ஏழு ஆண்டுகள் வரை அங்கு மறைந்திருந்து படைதிரட்டினான். அவன் ஆங்கிலேயருக்கு எதிராகப் படைதிரட்டுவதை இரண்டகன் மேல்பற்றுமூலை கதிர்காமநாயகம் மூலமாக அவர்கள் அறிந்தனர். எனவே, பண்டாரவன்னியனின் முயற்சியை முறியடிக்க மறைவாகப் படை நகர்த்தினர். ஆங்கிலேயரின் இப்பெரும்படையை திடீரென பண்டாரவன்னியன் எதிர்கொள்ள நேரிட்டது. இத்திடுநேர்வால் ஆயிரத்து எண்ணூற்றுப் பதினொன்றில் (1811) உடையாவூரில் நடைபெற்ற போரில் விழுப்புண்பட்டு மருத்துவம் பயனளிக்காத நிலையில் உயிர்நீத்தான்.

பண்டாரவன்னியனைக் கொல்ல முடியாவிட்டாலும், அவனைத் தோற்கடித்த புகழை நிலைநாட்ட முற்பட்ட கப்டன் வொன் றிபேக் கற்சிலைமடுவில் கல்வெட்டு ஒன்றை நாட்டினான். அக்கல்வெட்டு பண்டாரவன்னியனின் நினைவை என்றும் நம் நெஞ்சில் நிலை நிறுத்தும் நடுகல்லாக நிற்கிறது. மேலும் அவனது வரலாற்றுச் சான்றுகளாக முல்லைத்தீவு, முள்ளியவளை, பண்டாரிக்குளம், பதினெட்டாம்போர், பனங்காமம், உடையாவூர் போன்ற ஊர்கள் அமைந்துள்ளன. இறுதிவரை ஐரோப்பியருக்கு அடிபணிய மறுத்து, எதிர்த்து நின்ற இறுதித் தமிழீழத் தமிழ்மன்னன் - வன்னிமன்னன் பண்டாரவன்னியன் ஆவான்.

(விழுப்புண் - நேர்நின்று போராடுகிற போது ஏற்படுகிற புண்)

## அருங்குறிப்பு:

- வன்னிமண்ணின் இருபெரும் புகழ்பூத்த மன்னர்களாக கயிலைவன்னியனும் குலசேகரம் வைரமுத்து பண்டாரவன்னியனும் திகழ்ந்தனர்.
- ஆங்கிலேயரிடமிருந்து கோட்டைகள் கைப்பற்றப்பட்டன.
- 25-08-1803ல் பண்டாரவன்னியனின் படையணிகள் ஆங்கிலேயரின் முல்லைத்தீவுக் கோட்டையைத் தாக்கி மூன்று பீரங்கிகளைக் கைப்பற்றின.
- பண்டாரவன்னியனைக் காட்டிக்கொடுத்த இரண்டகன் மேல்பற்றுமூலை கதிர்காமநாயகம்.
- பண்டாரவன்னியனை நினைவுபடுத்தும் கல்வெட்டு கற்சிலைமடுவில் உள்ளது.

## கீழ்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.

1. வரலாற்றுப் புகழ் பூத்த வன்னியின் இருமன்னர்களும் யாவர்?
2. தமிழகத்தில் ஆங்கிலேயருக்கு எதிராகப் போர் புரிந்து வீரச்சாவைத் தழுவிக் கொண்ட வீரர்கள் யாவர்?
3. பண்டாரவன்னியனுக்கு உள்ள வரலாற்றுச் சிறப்பு என்ன?
4. பண்டாரவன்னியன் கைப்பற்றிய கோட்டைகள் எவை?
5. பண்டாரவன்னியனை ஆங்கிலேயருக்குக் காட்டிக் கொடுத்தவன் யார்?
6. பண்டாரவன்னியனுடன் தொடர்புடைய ஊர்களின் பெயர்களைத் தருக.
7. கப்டன் வொன் றிபேர்க் எந்நோக்கோடு பண்டாரவன்னியனுக்குக் கல்வெட்டு நாட்டினான்?
8. பண்டாரவன்னியனிடம் படை உதவி பெற்றுக்கொண்ட கண்டி மன்னன் யார்?

## மொழிவளம்

# சொல்லியவகைகள்

பொருள் முற்றுப்பெற்ற சொற்றொடரைச் சொல்லியம் என முன்பு கற்றீர்கள். சொல்லியங்களை அவற்றின் அமைப்பை அடிப்படையாகக் கொண்டு தனிச்சொல்லியம், தொடர்ச்சொல்லியம் என இரு வகைப்படுத்துவர். தனிச்சொல்லியங்களை இணைத்துத் தொடராக எழுதுவது தொடர்ச் சொல்லியமாகும். இதில் கூட்டுச்சொல்லியம், கலப்புச்சொல்லியம் என்பன அடங்கும்.

## தனிச்சொல்லியம்

எ-கா : கனிமொழி பள்ளிக்குச் சென்றாள்.
கனிமொழி பாடம் படித்தாள்.

மேலே தரப்பட்ட சொல்லியங்கள் ஒரு செயலைக் கொண்டு முடிந்தவை. எனவே, அவை தனிச்சொல்லியங்கள்.

## கூட்டுச்சொல்லியம்

ஒரு வினைமுற்றையும் ஒன்று அல்லது பல எச்சவினைகளையும் கொண்டு அமைவது கூட்டுச் சொல்லியம் ஆகும்.

எ-கா 1 : கனிமொழி பள்ளிக்குச் சென்று, பாடம் படித்தாள்.

இச்சொல்லியத்தில் 'கனிமொழி பள்ளிக்குச் சென்றாள்'. 'கனிமொழி பாடம் படித்தாள்' என இரண்டு சொல்லியங்கள் உண்டு. கனிமொழியின் இரண்டு செயல்கள் இரு சொல்லியங்களிலும் கூறப்படுகின்றன. கூட்டுச்சொல்லியமாக இணையும் போது, கனிமொழியின் ஒரு செயலைக் குறிக்கும் வினை, வினையெச்சமாக அமைய மறு செயலைக் குறிக்கும் வினை பயனிலையாக, அதாவது வினைமுற்றாக அமைகிறது.

எ-கா 2 : நான் விரைந்து செல்ல வேண்டும்.
இல்லையானால், தொடருந்தைத் தவற விட்டுவிடுவேன்.

இச்சொல்லியத்தில் ஓர் எழுவாய் பல முற்றுப் பயனிலைகளைக் கொண்டுள்ளது.

எ-கா 3 : வேந்தே வருக! மன்னா வருக! அரசே வருக!

இச்சொல்லியத்தில் ஒரே எழுவாயைக் குறிக்கும் பலபெயர்கள் ஒரே பயனிலையைத் தனித்தனியே பெற்றுள்ளன.

## கலப்புச்சொல்லியம்

ஒரு சொல்லியத்தில் 'என்று, என' ஆகிய இணைப்பிடைச் சொற்களுடன் இன்னொரு சொல்லியம் சேர்ந்து வருமாயின், அது கலப்புச் சொல்லியம் எனப்படும்.

எ-கா 1 : "நாளை புதிய வகுப்புகள் தொடங்கும்" என்று
பள்ளி முதல்வர் கூறினார்.

'பள்ளி முதல்வர் கூறினார்' என்பது தலைமைத்தொடர். 'நாளை புதிய வகுப்புகள் தொடங்கும்' என்பது சார்புத்தொடர். சார்புத்தொடர் 'என்று' என்னும் இணைப்பிடைச் சொல்லால் தலைமைத் தொடருடன் இணைக்கப்பட்டுள்ளது.

எ-கா 2 : மரத்திலிருந்து பழம் விழுந்ததை நான் கண்டேன்.
நான் கண்டேன் - தலைமைத்தொடர்.
மரத்திலிருந்து பழம் விழுந்தது - சார்புத்தொடர்.

## பயிற்சி

1. பின்வரும் சொல்லியங்களை அமைப்பு அடிப்படையில் வகைப்படுத்துக.

அ . சேவல் காலையில் கூவியது.

ஆ. காலையில் பூ மலர்ந்தது.

இ . கண்ணன் பூட்டை உடைத்துக் கதவைத் திறந்தான்.

ஈ . குறிஞ்சி காலையில் எழுந்து, காலைக்கடன்களை முடித்துக்கொண்டு பள்ளிக்குச் சென்றாள்.

2. தனிச்சொல்லியங்களைக் கூட்டுச்சொல்லியமாக மாற்றுக.

அ. பூங்குன்றன் பள்ளிக்கு வந்தான்.
குமரன் பள்ளிக்கு வந்தான்.
அங்கு பாடங்களைப் படித்தனர்.
வீட்டிற்குச் சென்றனர்.

ஆ. மழை நன்றாகப் பெய்தது.
குளம் நிரம்பி வழிந்தது.
வெள்ளம் பெருகி ஓடியது.

3. கலப்புச் சொல்லியங்களிலுள்ள தலைமைத்தொடரையும் சார்புத்தொடரையும் பிரித்துக் காட்டுக.

அ. 'இந்தக் கும்மிருட்டுக்குள்ளால் எப்படிப் போவது' என்று அப்பா முணுமுணுத்தார்.

ஆ. 'நாளைக் காலை பள்ளிக்கு வரமாட்டேன்' என்று எங்கள் தலைமையாசிரியர் கூறினார்.

பாடம் 3

# காட்டுமல்லிகை

கார்காலம் வரவும் வானம்
கவிழ்ந்தது மழை நன்னீர்; இப்
பாரெல்லாம் குளிரச் செந்நெற்
பயிரெலாம் செழிக்க, நீ என்
ஊரெலாம் மலர்ந்தாய் கண்டேன்,
காட்டு மல்லிகையே! உன்னை
யார் தள்ளினாலும் என்ன?
யானுளேன் பாடுதற்கு!

தாமரை பூக்க, அல்லி
தலை தூக்க, நீலம் பார்க்க,
மா மலர்ந்தது சம்பங்கி
மல்லிகை யொடு செவ் வந்திப்
பூ மலிந்தன; அங்கே ஓர்
புறத்திலே மிடுக்கினோடு
நீமலர் நிறைந்து நின்றாய்;
நிமிர்ந்தெனை மிகக் கவர்ந்தாய்!

கொல்லைகள் எங்கும் கண்ட
தில்லையே! உனைத்தம் வீட்டின்
எல்லைக்கு வெளியே வைத்தார்
இவ்வூரார்; அவர் கொடுக்கும்
செல்லத்தில் திளைத்து நின்று
செருக்கொடு மலரும் அந்த
முல்லைக் கெவ்விதத்திலே உன்
முகம் எழில் குறைவா யிற்று?

உன்னைப் போல் எனக்கும் வாழ்வில்
உலகத்தார் உயர்வு காணார்?
பொன்னை எம்காலிற் கொட்டிப்
போற்றிட வில்லையாயின்

என்னம்மா நமக்கு? நாங்கள்
எதனிலும் குறைவதில்லை;
உன்பாட்டில் மலர்வாய் நீ! நான்
என் பாட்டில் எழுதுகிறேன்.

- மகாகவி (து. உருத்திரமூர்த்தி)

## பொழிப்பு

மாரிகாலம் வந்ததும் வானம் கவிழ்ந்ததுபோல் மழை கொட்டிற்று. மழைநீர் நிறைந்து ஊரெல்லாம் குளிர்ச்சி அடைந்தது. அதனால், செந்நெற் பயிர்கள் செழித்து வளர, நீயும் ஊரெல்லாம் மலர்ந்து நின்றாய். நான் அதைக் கண்டேன். காட்டுமல்லிகையே உன்னை யார் வெறுத்து ஒதுக்கினாலும் என்ன? நானிருக்கிறேன் உன்னைப் புகழ்ந்து பாடுவதற்கு.

தாமரைப் பூ பூக்க, அல்லி பூத்துத் தலை நிமிர, குவளை மலர்ந்து நிற்க, மாமரமும் பூத்தது. சம்பங்கி, மல்லிகை, செவ்வந்திச் செடிகளெல்லாம் மலர் நிறைந்து நின்றன. இதனிடையே நீயும் மிடுக்கோடு நான் குறைந்தவளில்லை என்று மலர்களைச் சுமந்து, அழகொடு நிமிர்ந்து நின்று என் உளத்தைக் கவர்ந்தாய்.

வீட்டுக் கொல்லைப்புறங்களில் உன்னைக் கண்டதில்லையே நான். ஏன்? ஊரார் உன்னைத் தம் வீட்டின் எல்லைக்குள் வளரவிடாமல் பிடுங்கி எறிந்து விடுவர். அதனால், நீ வீடுகளுக்கு வெளியில் நின்றாய். ஆனால், இந்த ஊரார் கொடுக்கும் செல்லத்தில் மகிழ்ந்து நின்று செருக்கோடு மலருகிறதே, அந்த முல்லைக்கொடி அதற்கு எந்த விதத்திலே உன் மலர்முகம் அழகில் குறைந்தது?

இவ்வளவு அழகிய உன்னை ஒதுக்குவது போல், என் வாழ்விலும் இந்த உலகத்தார் என் உயர்வுகளைக் காண மறுக்கின்றனர். பொன்னை எங்கள் காலடியில் கொட்டிப் புகழ்ந்து போற்றவில்லை என்றால், என்னம்மா எமக்கு? ஒரு இழிவும் எமக்கில்லை. நீயும் நானும் ஒன்றிலும் குறைந்தவர்களில்லை. நீ வழமைபோல் உன்பாட்டில் மலர்ந்து கொண்டேயிரு! நான் எனது பாடல்களிலே உன்னைப் புகழ்ந்து எழுதுகிறேன்.

## கீழ்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.

1. காட்டு மல்லிகை எப்போது எங்கே மலர்ந்தது?
2. கார்காலத்தில் பூத்ததாகக் கவிஞர் கூறும் பூக்களின் பெயர்களைத் தருக.
3. முல்லை மலரின் செருக்குக்குக் கவிஞர் கற்பிக்கும் கரணியம் என்ன?
4. 'உன்னைப் போல் எனக்கும் வாழ்வில் உலகத்தார் உயர்வு காணார்' என்னும் அடிகளில் இருந்து நீர் விளங்கிக் கொள்வது என்ன?
5. கவிஞர் காட்டு மல்லிகையின் மீது காட்டும் பரிவு புலப்படும் பாடல் அடிகளைத் தருக.
6. கவிஞர் எந்த உணர்வு நிலையில் இப்பாடலை எழுதியிருப்பார் என நீர் கருதுகிறீர்?
7. கவிஞர் காட்டுமல்லிகையைப் பாடற்பொருளாக்கிப் பாடக் கரணியம் யாது?
8. பாடலின் முதலிரு பகுதிகளின் பொருளை எளிய நடையில் எழுதுக.

## சொற்பொருள்

| | | |
|---|---|---|
| கார்காலம் | - | மழைகாலம் |
| பார் | - | உலகம் |
| நீலம் | - | நீலோற்பலம்,குவளை, நெய்தல் |
| மா | - | மாமரம் |
| மலிந்தன | - | நிறைந்தன |
| கொல்லை | - | வீட்டின் பின்புறம், கோடி |
| எழில் | - | அழகு |

## இலக்கணம்

## இடைச்சொற்கள்

பெயர்ச்சொல், வினைச்சொல் என்பவற்றைப் போல, தனித்து நின்று பொருள் தரும் ஆற்றல் இல்லாதது இடைச்சொல். இடைச்சொல்லானது பெயர்ச்சொல்லுடனோ அல்லது வினைச்சொல்லுடனோ சேர்ந்து அச்சொற்களின் பொருளை வேறுபடுத்தும்.

பொதுவாக இடைச்சொற்கள் சொல்லாக்கத்திற்கு மட்டுமன்றி சொல்லியங்களில் நுணுக்கமான பொருள் வேறுபாடுகளை உணர்த்துவதற்கும் பயன் படுத்தப்படுகின்றன. உணர்ச்சிகளையும் கருத்துகளையும் மிகத் தெளிவாகவும் அழுத்தமாகவும் சுருக்கமாக வெளிப்படுத்த இடைச்சொற்கள் பயன்படுத்தப்படுகின்றன.

## இடைச்சொற்களின் வகைகள் சில.

| | | |
|---|---|---|
| வேற்றுமை உருபுகள் | - | ஐ, ஆல், கு போன்றன. |
| விகுதிகள் | - | அன், ஆள், உம் போன்றன. |
| இடைநிலைகள் | - | த், ட், ற், இன் போன்றன. |
| சாரியைகள் | - | அத்து, அற்று, அம் போன்றன |
| தத்தம் பொருளை உணர்த்தி வருவன | - | ஏ, ஓ, உம், தோறும், தான் போன்றன |

## வேற்றுமை உருபுகள்

எகா : நாட்டைக் காப்பது மக்கள் கடமை. (ஐ)
இந்த உலகம் போரால் துன்புறுகிறது. (ஆல்)
புலம்பெயர்ந்த தமிழராகிய நாம் தாயகத்துக்கு உதவுவோம்.(கு)

## விகுதிகள்

எ-கா : அவன் சிறுவனாயினும் ஒரு பேரறிஞன். (அன்)
எழிலி குமூக நலனுக்காக உழைக்கிறாள். (ஆள்)
கழுகு உயரப் பறக்கும். (உம்)

## இடைநிலைகள்

எ-கா :

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| படித்தான் | - | படி | + | த் | + | த் | + | ஆன் (த்) |
| பாடினான் | - | பாடு | + | இன் | + | ஆன் (இன்) | | |
| கற்றாள் | - | கல் | + | ற் | + | ஆள் (ற்) | | |

## சாரியைகள்

எ-கா :

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| மரம் | + | அடி | - | மரம் | + | அத்து | + | அடி | - | மரத்தடி (அத்து) |
| அவை | + | கு | - | அவை | + | அற்று | + | கு | - | அவற்றுக்கு (அற்று) |
| புளி | + | காய் | - | புளி | + | அம் | + | காய் | - | புளியங்காய் (அம்) |

தத்தம் பொருளுணர்த்தி நிற்கும் ஏ, ஓ, உம், தோறும், தான் முதலிய இடைச்சொற்கள் உணர்த்திநிற்கும் சில பொருள்கள்.

### 'ஏ' இடைச்சொல்

நீ நன்றே செய்தாய்.

வானே நிலனே வளியே தீயே நீரே என ஐம்பூதங்கள் உண்டு.

மாணவிகளுள் மாதவியே நன்கு பாடுவாள்.

## 'ஓ' இடைச்சொல்

இன்று மழை பெய்யுமோ?
இலை வகையோ பழவகையோ சத்துணவு?
வள்ளுவனோ தவறு செய்தான்?

## 'உம்' இடைச்சொல்

உனக்குத் தீங்கு செய்தாலும் நீ பிறர்க்குத் தீங்கு செய்யாதே!
ஆசிரியரும் வியக்கும் பேச்சு.
கவிஞரும் வந்தார்.

## 'தோறும்' இடைச்சொல்

நாள்தோறும் கீரையை உணவுடன் சேர்த்துக் கொள்வது நன்று.
ஊர்தோறும் கருத்தரங்கு நடைபெற்றது.

## 'தான்' இடைச்சொல்

நீதான் வெற்றிபெறுவாய்.
என்னைக் குடிக்கத்தான் விட்டாயா? உண்ணத்தான் விட்டாயா?

### பயிற்சி

பின்வரும் சொல்லியங்களில் காணப்படும் இடைச்சொற்களை இனங்கண்டு, அவை எவ்வகையைச் சார்ந்தன எனக் குறிப்பிடுக.

1. உங்களில் கலைமகளே நன்கு ஆடுவாள்.
2. பலகாரமோ பண்ணியமோ தின்றாய்?
3. பிட்டும் மாம்பழமும் சேர்த்து உண்ணச் சுவையாக இருக்கும்.
4. காற்றுப் பலமாக வீசியதால் மரங்கள் அசைந்து ஆடின.
5. நாள்தோறும் பழங்கள் உண்பது உடலுக்கு நல்லது.

பாடம் 4

# தமிழுக்குத் தந்த கனி

அணிலின் வால் போல மீசை கொண்ட மன்னவன்
அதியமான் நெடுமான் அஞ்சி யெனும் தென்னவன்
ஆதிநாளில் தமிழ் மண்ணில் முதன் முதலாய்
அருங் கரும்பைக் கொண்டுவந்து விளைச்சல் செய்தார்.
அதன் இனிப்பைத் தமிழில் கண்ட அவனின் முன்னோர்
அதியர் குடிப்பிறந்ததாலே அதியமான் ஆனான்.

தகடூரைத் தலைநகராய்க் கொண்டு - அந்தத்
தமிழூரில் தலைநிமிர்ந்து ஆண்டான்.

திண்தோளில் வலிமைதனைத் தேக்கிக்
கண் அசைவில் பகைப்புலத்தைப் போக்கி
மண்மீது புகழ் நிலைக்க மார்பில்
புண் ஏந்தி வீழ்வதையே விரும்பி
அஞ்சியெனப் பெயர் பூண்ட போதும்
அஞ்சாத வரிப்புலியாய் மானமுடன் வாழ்ந்தான்.

அவ்வீரன் அதியமான் ஒரு நாட்காலை
அடவியிற் சென்று அலைந்து திரிந்து
விலங்குகள் மீது வேல்களைப் பொழிந்து
வேட்டையை நிகழ்த்தி விரைந்து திரும்பினான்.

வழியில் மலையிடைப் பிளவொன்று கண்டு
விழியினைச் செலுத்தி வியப்பாய் நோக்கினான்.

தனிமையிலே நெல்லி மரமொன்றுயர்ந்து
தன் கிளையினில் சிறு இலைகளுக்கிடையே
கனியொன்றேயொன்றைத் தாங்கி நின்றது.

இனிப்பாக இருக்குமென்றும் அதனையுண்டால்
இறப்பேதும் அணுகாதென்றும் இஃதுண்மையென்றும்
தலைப்பாகைத் துறவியொருவர் புதுமையாகப் புகன்றவுடன்
இமைப் போதும் தயங்காமல் அக்கனியைப் பறித்துக்கொண்டான்.

தனைக் காக்க மன்னவனும் அக்கனியை உண்பான் என்று,
தகடூர் வீரரெல்லாம் எண்ணிக் கொண்டு
தடந்தோள் உயர்ந்திடவே தலைவன் பின் நடைபோட்டார்.

அரண்மனைக்கு வந்தவுடன் நெடுமானஞ்சி
அமுதத் தமிழ்பாடும் அவ்வையை அழைக்கலுற்றான்.

''மன்னவனே ஏன் அழைத்தாய் எனத் தெரியும்
மாற்றானாம் தொண்டைமானிடம் எனைத் தூதாக அனுப்பத்தானே''
என்று கேட்ட அவ்வை அம்மை
''சென்று வரத் தயார்தான்'' என்றாள் - ''தூதில்
வென்று வருவதற்கு முன்னே - இதைத்
தின்று சுவைத்திடுக'' என வேண்டி,
நெல்லிக்கனியை நீட்டினான் வேந்தன் - நிலவில்
அல்லி மலர்வது போல் முகமலர்ந்தாள் அவ்வை!
''சுவையான கனிதான்'' என்று சுவைத்துப் பார்த்து; அரசு
அவைக் கவியான அவ்வை சொன்னாள்.

''அருமையாய்க் கிடைத்திட்ட இக்கனியுண்டால்
ஆயுள் நீளுமென்று அடவியில் துறவி சொன்னார்
அடியேனின் உயிர் அதிக நாள் இருந்தென்ன பயன்?
அவ்வையின் ஆயுள் வளர்ந்தால் தமிழ் வளரும்
தகடூரின் பெயர் உள்ளளவும் நான் வாழ்வேன்
தமிழ் உள்ளளவும் வாழ்க அவ்வையே'' என்றான்.

உண்மையை முன்கூட்டி உரைத்திட்டால்
உண்ணாமல் மறுத்திடுவாள் அவ்வையென்று
தான் வாழக் கருதாமல் தமிழ்த்தாய் வாழத்
தகடூரான் தந்தகனி நெல்லிக்கனி;

அதியமான் தமிழ் ஆர்வம் போற்றி
அவ்வை தந்த நன்றிக்கனி; இந்த செய்யுட்கனி!

- சங்கத்தமிழ் நூலிலிருந்து

"வலம்படு வாய்வாள் ஏந்தி, ஒன்னார்
களம்படக் கடந்த கழல் தொடித் தடக்கை
ஆர்கலி நறவின், அதியர் கோமான்
போர்அடு திருவின் பொலந்தார் அஞ்சி!
பால்புரை பிறைநுதல் பொலிந்தசென்னி
நீலமணி மிடற்று ஒருவன்போல
மன்னுக பெரும நீயே! தொன்னிலைப்
பெருமலை விடரகத்து அருமிசைக் கொண்ட
சிறியிலை நெல்லித் தீங்கனி குறியாது
ஆதல் நின்னகத்து அடக்கிச்
சாதல் நீங்க எமக்கு ஈந்தனையே"

(புறநானூறு - பாடல் 91 ஔவையார்)

## பொழிப்பு

அணில்வால் போன்று கற்றையாய் அடர்ந்த மீசை கொண்ட மன்னன்; அதியர்மான் நெடுமான் அஞ்சி என்று அழைக்கப்படும் தென்னாட்டவன். முன்னாளிலே தமிழ்மண்ணில் முதன்முதலாக அரிய கரும்பைக் கொண்டு வந்து விளைவித்தவன் கரும்பின் இனிமையைத் தமிழிலே கண்ட அவனது முன்னோர் அதியர் குடியில் பிறந்ததாலே அதியர்மான் எனப் பெயர் பெற்றான்.

தகடூரைத் தன் தலைநகராகக் கொண்டு, தமிழ் விளங்கும் அவ்வூரில் யாருக்கும் அஞ்சாமல் ஆட்சி செய்தான்.

வைரம்பாய்ந்த தோளிலே வலிமையைத் தேக்கி, தன் கண் சாடையாலேயே வீரர்களை உசுப்பி, பகைவர்களை விரட்டி, மண்ணுலகிலே தனது புகழ் நிலைக்கவேண்டும் என்று போர்க்களத்திலே மார்பில் புண்பட்டுச் சாவதையே விரும்பி, அஞ்சி என்ற பெயர் கொண்ட போதும் அஞ்சாத வேங்கையென மானத்துடன் வாழ்ந்தான்.

அத்தகைய வீரனான அதியர்மான் ஒருநாட்காலை வேட்டையாடக் காட்டுக்குச் சென்று அலைந்து திரிந்து, விலங்குகளை வேல் எறிந்து தாக்கி வேட்டையாடிக் கொண்டு விரைவாகத் திரும்பி வந்தான்.

வழியிலே ஒரு மலையில் பிளவு ஏற்பட்டிருப்பதைக் கண்டு, ஏன் வெடித்தது என்று வியப்புடன் பார்த்தான். (நெல்லிமரத்தின் வேருக்கு நெக்குவிட்டுப் பிளந்து இருந்தது)

அந்த மலையிலே தனிமரமாக நின்ற நெல்லி மரமொன்று, தன் சிறிய இலைகளுக்கிடையிலே ஒரேயொரு கனியைக் காய்த்திருந்தது.

இக்கனி இனிப்பானது என்றும் அக்கனியை உண்டால் இறப்பு வராதென்றும் அது பொய்யில்லை உண்மையென்றும் தலையில் மேல்துண்டைக் கட்டியிருந்த துறவி ஒருவர் சொன்னவுடன், ஒரு கணமும் தயங்கி நில்லாமல் அக்கனியைப் பறித்தான். தன்னுயிரைக் காப்பதற்கு மன்னன் அக்கனியை உண்பான் என்று தகடூர் வீரர் எண்ணிக்கொண்டு, மகிழ்ச்சிப் பெருக்குடன் தம் தலைவன் பின் நடந்து சென்றனர்.

அரண்மனைக்கு வந்தவுடன் நெடுமானஞ்சி ஒன்பான் மணிகளிலே உயர்ந்ததான மாணிக்கம் போன்று, மொழிகளிலே உயர்ந்த தமிழைப் பாடும் ஔவையை அழைத்தான்.

மன்னவா! ஏன் அழைத்தாய் என்று நானறிவேன். உன் பகைவனான தொண்டமானிடம் தூதனுப்பத்தானே என்று கேட்ட ஔவைப் பாட்டி, நான் தூது போய்வர அணியந்தான் என்றாள். தூதுசென்று வென்று வருவதற்கு முன், இதைத் தின்று சுவையுங்கள் என்று நெல்லிக்கனியைக் கொடுத்தான் வேந்தன். நிலவு வரக் குமுதமலர் மலர்வதுபோல் முகமலர்ந்தாள் ஔவை. 'சுவையான கனிதான்' என்று அக்கனியைச் சுவைத்துப் பார்த்து, அதியமானின் அரசவைப் புலத்தி ஔவை சொன்னாள்.

எளிதில் கிடைக்காத இக்கனியை உண்டால் உயிர்வாழ்வு நீளுமென்று காட்டிலே ஒரு துறவி சொன்னார். உங்கள் அடியவனான என் உயிர் அதிக நாள் இருந்தென்ன பயன்? ஔவையின் வாழ்வு வளர்ந்தால் தமிழ் வளரும், அதனால், தகடூரின் பெயர் நிலைத்திருக்கும் வரை நான் வாழ்வேன். தமிழ் உள்ளளவும் நீ வாழ்க! ஔவையே! என்றான் மன்னன்.

அக்கனியை உண்டால் நீடூழி வாழலாம் என்ற உண்மையை முதலிலேயே சொன்னால், அக்கனியை உண்ண மறுத்திடுவாள் ஔவை. தான் நீண்டநாள் வாழக் கருதாமல், தமிழ்த்தாயான ஔவை வாழத் தகடூர் மன்னன் கொடுத்தான் அந்நெல்லிக் கனியை.

அதியர்மானுடைய தமிழ் மீது கொண்ட ஆர்வத்தைப் போற்றி ஔவை அதியர்மானுக்கு தந்த நன்றிக்கனியே இந்தச் செய்யுளாகிய கனி.

## கீழ்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.

1. அதியர்மான் நெடுமான் அஞ்சி எத்தகைய தன்மை கொண்டவன்?
2. அவன் நெல்லிமரத்தை எங்கே கண்டான்?
3. அதியர்மான் நெல்லிமரத்திலிருந்து பறித்த கனியின் சிறப்பு என்ன?
4. அதியர்மான் மாளிகைக்கு வந்தவுடன் யாரை, ஏன் அழைத்தான்?
5. அதியர்மான் ஔவைக்கு நெல்லிக்கனியின் சிறப்புத் தன்மையை முதலில் கூறாதது ஏன்?
6. அதியர்மான் நெல்லிக்கனியை, தான் உண்ணாமல் ஔவைக்குக் கொடுத்தது ஏன்?
7. "மன்னவனே! ஏன் அழைத்தாய் எனத் தெரியும் மாற்றானாம் தொண்டைமானிடம் எனைத் தூதாக அனுப்பத்தானே. இது யாரால் யாருக்கு, எப்போது கூறப்பட்டது?
8. புறநானூறு எத்தொகுப்பில் உள்ளது? புறநானூற்றுப் பாடல்கள் தமிழரின் எத்தன்மையை விதந்து கூறுகின்றன?

## சொற்பொருள்

| | | |
|---|---|---|
| அஞ்சி | - | அன்பு, நாண், ஒப்பரவு, கண்ணோட்டம், வாய்மை ஐந்துமுடையவன் |
| திண்தோள் | - | வயிரத்தோள் |
| தடந்தோள் | - | அகன்ற மார்பு |
| அல்லி | - | ஒரு நீர்ப்பூ |
| ஆயுள் | - | உயிர் |
| ஒன்பான் மணிகள் | - | ஒன்பது செம்மணிகள் |

# இலக்கணம்

## வேற்றுமை

ஐந்தாம் வேற்றுமை உருபுகள் - இல், இன் என்பன பின்வரும் பொருள்களில் இடம்பெறும்.

நீங்கற்பொருள்
ஒப்புப்பொருள்
எல்லைப்பொருள்
ஏதுப்பொருள்

### நீங்கற்பொருள்

இன்றைய வழக்கிலே 'இன்' உருபு நீங்கற்பொருளில் வருவதில்லை. 'இல்' என்னும் உருபோடு 'இருந்து' என்னும் சொல்லுருபு சேர்ந்து வருவதே இன்றைய வழக்காகும்.

எ-கா : நான் வீட்டிலிருந்து புறப்பட்டேன்.
நண்பன் ஊரிலிருந்து வந்தான்.
மரத்திலிருந்து பழம் விழுந்தது.
தூக்கத்திலிருந்து விழித்தேன்.
கவலையிலிருந்து விடுபட்டேன்.

இல் - இருந்து என்பதற்குப் பதிலாக 'இடமிருந்து' என்னும் உருபும் இணைந்து வரும்.

எ-கா : நான் மாறனிடமிருந்து நூலைப் பெற்றுக்கொண்டேன்.

### ஒப்புப்பொருள்

எ-கா : காந்தியில் உயர்ந்தோன் திலீபன்.
பாலின் வெண்மை கொக்கு.

இன்றைய வழக்கில் 'இன்' உருபினாலோ 'இல்' உருபினாலோ ஒப்புப் பொருள் உணர்த்தப்படுவது குறைவு. இல், இன் உருபுகளுக்குப் பதிலாக விட, காட்டிலும், பார்க்கிலும் என்னும் சொற்களில் ஒன்று இணைந்தே ஒப்புப்பொருளை உணர்த்தும்.

எ-கா : நிலவனை விட வழுதி சுறுசுறுப்பானவன்.
குழலியைப் பார்க்கிலும் வாணி பாடுவாள்.
வாணியைக் காட்டிலும் தேன்மொழி அழகானவள்.

## எல்லைப்பொருள்

எ-கா : இலங்கையின் வடக்கே இந்தியா இருக்கிறது.
கோவிலின் தெற்கே பெரிய குளம் இருக்கிறது.

இலங்கையின், கோவிலின் என்ற சொற்களுடன் வந்துள்ள 'இன்' உருபு எல்லைப் பொருளை உணர்த்தும்.

## ஏதுப்பொருள்

எ-கா : விளையாட்டில் வல்லவன் வாரணன்.
வீரத்தில் சிறந்தவன் இராவணன்.

ஒன்றின் உயர்வுக்கோ, தாழ்வுக்கோ கரணியமாய் அமைவது ஏதுபொருளாகும்.

# ஆறாம் வேற்றுமை

உருபு - அது

எ-கா 1: பாவேந்தரது பாடல்கள் பகுத்தறிவு மிகுந்தவை.
பாவாணரது ஆய்வுகள் தமிழை உயர்த்தின.

இங்கு 'அது' என்னும் உருபு உடைமைப்பொருளை உணர்த்துகிறது.

எ-கா 2: எழிலனுடைய நூல் என்னிடம் உள்ளது.
குழந்தையினுடைய உள்ளம் கள்ளங்கபடமற்றது.

இங்கு 'அது' எனும் உருபு நிற்பதற்குப் பதிலாக 'உடைய' என்ற சொல்லுருபு உடைமைப்பொருளை உணர்த்துகிறது.

## பயிற்சி

1. பின்வரும் சொல்லியங்களில் வேற்றுமை ஏற்றுள்ள சொற்களை எடுத்துக்காட்டி, அவை உணர்த்தும் பொருளையும் எழுதுக.

    1. மாறன் வீட்டிலிருந்து புறப்பட்டான்.
    2. நாவரசியினுடைய பாட்டி தாயகத்தில் இருக்கிறார்.
    3. எழிலன் மற்றைய சிறுவர்களைப் பார்க்கிலும் வேறுபட்டவன்.
    4. ஔவையாரது நூல்கள் படிக்கப் படிக்கத் தெவிட்டாது.
    5. மாமாவினுடைய அஞ்சல் இன்று கிடைத்தது.

2. நீங்கற்பொருள், ஒப்புப்பொருள் என்பன அமையக்கூடிய வகையில் இரண்டு சொல்லியங்கள் எழுதுக.

பாடம் 5

# காளமேகப்புலவர்

காளமேகப் புலவர் தமிழகத்துக் கும்பகோணம் என்னும் ஊரைச்சேர்ந்தவர். அந்தண குலத்தில் பிறந்தவர்; இவரது இயற்பெயர் வரதன். இவர் திருவரங்கம் கோவில் மடைப்பள்ளியில் வேலை பார்த்தவர். பதினைந்தாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர்; பிறர்மீது வசைகூறும் ஆசுகவிப் பாடல்களை விரைந்து பாடுவதில் வல்லவர்.

போலிப் புலவர்களைக் கண்டால், அஞ்சாது இழித்துப் பாடியமையால் 'வசைபாடக் காளமேகம்' என்று சிறப்பிக்கப் பெற்றவர். காளமேகம் என்றால், கார்காலத்தில் கொண்டல் காற்றோடு இருண்டு கறுத்து, இடிஇடித்து முழங்கிப் பெருமழை பொழியும் முகில்.

ஒருநாள் காளமேகப்புலவர் கடும் வெய்யிலில் களைத்துத் தண்ணீர் விடாயுடன் ஓர் ஊருக்குள் வந்தார். அங்கே ஒரு பெண் மோர் விற்றுக் கொண்டிருந்தாள். புலவர் அவளிடம் சென்று ஒரு குவளை மோர் வாங்கிப் பருகினார். ஆனால், அந்த மோரோ தண்ணீர் அதிகளவில் கலக்கப் பட்டிருந்ததால் சுவையின்றிச் சப்பென்றிருந்தது. அவருக்குச் சினம் உண்டாயிற்று. விற்றவள் பெண்ணாய் இருந்தமையால் அவருக்கு வைதலைத் தவிர வேறொன்றும் செய்ய முடியவில்லை. உடனே மோரைப் பழித்து ஒரு பாடலைப் பாடினார்.

காரென்று பேர்படைத்தாய் ககனத் துறும்போது
நீரென்று பேர் படைத்தாய் நீணிலத்தில் வீழ்ந்ததற்பின்
வாரொன்று மென்முலையார் ஆய்ச்சியர்கை வந்ததற்பின்
மோரென்று பேர்படைத்தாய் முப்பேரும் பெற்றாயே!

*கார்முகில் என்று பெயர் பெற்றிருந்தாய் விண்ணிலே இருந்தபோது. நீரென்று பெயரைப் பெற்றாய் இவ்வுலகிற்கு வந்ததன் பின்பு. கச்சணிந்த இந்த ஆய்ச்சியருடைய கைக்கு வந்ததன் பின்பு மோரென்று பெயர் பெற்றுள்ளாய். நீ ஒரே பொருள் மூன்று பெயரையும் பெற்றுள்ளாய் என்று நகைச்சுவையோடு பாடினார். நிலத்தில் நீர் இருக்கிறது. அது முன்னர் விண்ணில் முகிலாக இருந்தது. இப்போது மோரென்ற பெயரோடு பானைக்குள் இருக்கிறது.*

இன்னொரு நாள் நீண்ட தொலைவிலிருந்து நடந்து, நண்பகல்வேளை தாண்டி, பசிக்களையுடன் நாகபட்டினம் என்ற ஊருக்குள் புகுந்தார். ஊர் எல்லையிலே வழிப்போக்கருக்கு உண்டியும் உறைவிடமும் வழங்கும் (தாவளம்) சத்திரம் இருந்தது. காளமேகம் சத்திரத்துக்குச் சென்று, பசித் திருக்கிறேன் உணவு வேண்டும் என்று சத்திர மேலாளரிடம் கேட்டார். அவர் புலவரை அமரச்சொல்லிவிட்டு சமையல் செய்யச் சென்றார். நீண்டநேரம் காத்திருந்தும் உணவு வரவில்லை. கடைசியில் நள்ளிரவு வேளையில் உணவு வந்தது. கடும்பசிக் களையினாலும் மிகக் காலந்தாழ்த்தி உணவு வந்ததாலும் சினங்கொண்டார் காளமேகம். அச்சத்திரம் வழிப்போக்கரை உரியபடி கவனிக்கவில்லை. அதை அமைத்தவன் சரியாகச் தாவளத்தை நடத்தவில்லை என்பதை வெளிப்படுத்திப் பழித்துப் பாடினார்.

கத்துகடல் சூழ்நாகைக் காத்தான்தன் சத்திரத்தில்
அத்தமிக்கும் போதில் அரிசிவரும் - குத்தி
உலையிலிட ஊரடங்கும் ஓரகப்பை அன்னம்
இலையிலிட வெள்ளி எழும்.

*ஆர்ப்பரிக்கிற கடலால் சூழப்பட்டுள்ள நாகபட்டினத்திலுள்ள காத்தான் என்பவனுடைய தாவளத்தில் (தாவளம் என்பது பசித்து வரும் வழிப்போக்கர்களுக்கு உணவளிக்கும் மடம்) கதிரவன் மறைகிற வேளையில் அரிசி வரும்; தவிடு நீக்கும்பொருட்டுக் உரலில் இட்டுக் குற்றி உலையில் அரிசி போட ஊர் உறங்கிவிடும்; ஓர் அகப்பை சோறு உண்பதற்கு வாழையிலையில் இட கிழக்கே விடிவெள்ளி எழுந்துவிடும். (விடிந்து விடும்)*

இன்னொரு சமயம் காளமேகம் ஒரு பந்தியிலே உணவு உண்டு கொண்டிருந்தார். அப்போது அவருக்கு முன்னால் அமர்ந்து உண்டுகொண்டிருந்த ஒரு பார்ப்பானது குடுமி அவிழ்ந்து இலைச்சோற்றில் சரிந்தது. அவன் கையால் மயிரை எடுத்து உதறினான். அச்சமயம் மயிரில் ஒட்டியிருந்த எச்சிற்சோறு காளமேகத்தின் இலையில் விழுந்தது. காளமேகத்துக்குச் சினம் பற்றிக்கொண்டு வந்தது. உடனே அவனை இழித்து ஒரு பாட்டைப் பாடினார்.

சுருக்கவிழ்ந்த முன்குடுமிச் சோழியா! சோற்றுப்
பொருக்குலர்ந்த வாயா! புலையா! - திருக்குடந்தைக்
கோட்டானே! நாயே! குரங்கே! உனையொருத்தி
போட்டாளே வேலையற்றுப் போய்.

*கட்டவிழ்ந்த முன்குடுமி கட்டியிருந்த பிராமணா! சோற்றுப் பொருக்கு காய்ந்திருக்கிற வாயா! இழிந்தவனே! திருக்குடந்தை மலையிலிருக்கிற குகையில் வாழும் ஆந்தையே! நாயே! குரங்கே! உன்னை ஒருத்தி பெற்றுப் போட்டாளே (விலங்குகளுக்கு ஒப்பிட்டு) வேறு வேலையொன்றும் இல்லாமல்.*

பந்தியிலே கிடைக்கிற சோற்றை முடிந்தவரை தின்கிற அவாவில் நீண்ட நேரம் உண்டுகொண்டிருந்ததால் வாயில் ஒட்டியிருக்கிற சோறு காய்ந்து விட்டது. ஆனாலும், அந்தப் பிராமணன் நாகரிகம் இல்லாமல் தின்பதிலேயே கண்ணாயிருந்தான். அதனால் குடுமி அவிழ்ந்து விழ, அதை நாகரிகமாக ஒதுக்காமல் உதறியதால் சோறு பறந்தது. இதைக் கவனித்துக்கொண்டு இருந்த புலவரால் பொறுக்க முடியவில்லை. இவ்வாறு, இடத்திற்கு ஏற்றபடி வசைபாடும் பாடல்களை விரைந்து பாடும் திறன் பெற்றவர் காளமேகம்.

## கீழ்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.

1. காளமேகம் என்றால் என்ன?
2. காளமேகப்புலவரின் கவிபாடுந்திறன் எத்தகையது?
3. காளமேகப்புலவர் வாழ்ந்த காலப்பகுதி எது?
4. மோர் தண்ணீராக உள்ளது என்பதை காளமேகம் நகைச்சுவையாக எவ்வாறு கூறுகிறார்?
5. எத்திசையில் விடிவெள்ளி எழும்?
6. சொற்பொருள் விளக்கம் தருக.
   கார், நீணிலம், ககனம்
7. சுருக்கு அவிழ்ந்த முன்குடுமிச் சோழியா! விளக்குக.
8. காளமேகப் புலவரின் தொழில் என்ன?

## சொற்பொருள்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மடைப்பள்ளி | - | கோவிற் சமையற்கட்டு | ஆசுகவி | - | வசைப்பாடல் |
| வைதல் | - | ஏசுதல் | உறும் | - | சேரும் |
| கார் | - | மழைமுகில் | ககனம் | - | வானம் |
| நீணிலம் | - | மண்ணுலகம் | சுருக்கு | - | முடிச்சு |
| ஆய்ச்சியர் | - | இடைக்குலப்பெண்கள் | புலையா | - | இழிந்தவனே |
| கோட்டான் | - | ஆந்தை | | | |

## இலக்கணம்

### ஏழாம் வேற்றுமை

இவ்வேற்றுமைக்கு கண், இல், இடம், உள், மேல், கீழ், முதலான பல உருபுகள் உண்டு. எனினும் இல், இடம் என்பவையே இன்று பெரு வழக்கில் இருக்கின்றன.

எ-கா 1: மாமா அமெரிக்காவில் வாழ்கிறார்.
குன்றன் தமிழ்ப்பள்ளியில் படிக்கிறான்.

இங்கு 'இல்' என்ற உருபு இடப்பொருளில் வந்துள்ளது.

எ-கா 2: குழந்தை அம்மாவிடம் தவழ்ந்து சென்றது.
அவரிடம் நிறையப் பொருட்கள் இருந்தன.

இங்கு 'இடம்' என்ற உருபு இடப்பொருளில் வந்துள்ளது.

எனவே, ஏழாம் வேற்றுமையின் பொருள் இடப்பொருளாகும்.

# எட்டாம் வேற்றுமை

இது விளிவேற்றுமை என்று அழைக்கப்படும்.

எ-கா: தம்பி! நீ என்ன செய்கிறாய்?
அம்மா! நீங்கள் எங்கு சென்றீர்கள்?

மேலே உள்ள சொல்லியங்களில் தம்பி, அம்மா என்பன விளிக்கப்படும் பெயர்களாக அமைகின்றன. அவை படர்க்கைப் பெயர்கள். படர்க்கைப் பெயர்களை முன்னிலைப்படுத்திப் பேசுவோனால் விளிக்கப்படும் போது, அவை விளிப்பெயர்களாகின்றன.

விளிவேற்றுமை ஏற்ற பெயர்கள் நிற்கும் முறை

| | | | | |
|---|---|---|---|---|
| மகனே | - | மகன் 'ஏ' | - | ஈற்றில் 'ஏ' பெறுதல் |
| தங்கை | - | தங்காய்! | - | ஈற்றயல் எழுத்து திரிந்தது |
| நண்பன் | - | நண்பா! | - | ஈறுகெட்டு ஈற்றயல் நீண்டது |
| அம்மா | - | அம்மா! | - | மாற்றமின்றி இயல்பாக நிற்றல் |

## பயிற்சி

பின்வரும் சொல்லியங்களில் வேற்றுமை ஏற்றுள்ள சொற்களை எடுத்துக்காட்டி, அவை எந்தெந்த வேற்றுமை என்பதனையும் எழுதுக.

1. ஔவையார் புலமையிற் சிறந்தவர்.
2. புலவரது பாடல் பாராட்டப்பட்டது.
3. வானத்தில் விண்மீன்கள் மின்னுகின்றன.
4. காளமேகப் புலவர் நீண்ட தொலைவிலிருந்து நடந்து வந்தார்.
5. மலையிலிருந்து அருவி விழும் காட்சியைக் கண்டு மகிழ்ந்தோம்.

பாடம் 6

## தைப்பொங்கல்

தை பிறந்ததும் நெற்கதிர்கள் முற்றித் தலைசாய்ந்து, பொன்னொளி வீசி அலையாடித் தவழும். செந்நெல் மணம் தென்றலிலே மிதந்து வரும். வாழையும் தெங்கும் குலைதாங்கி நிற்க, கரும்பு கணு முற்றி வெடித்து சுரும்புண்ணக் கிடக்க, எங்கும் வளங்கொழித்து புத்துணர்வு பொங்க, மண்ணுலகம் இளமையுடன் சிலிர்த்து நிற்கும்.

இந்த இயற்கையின் இன்பக் கூத்திற்கெல்லாம் கதிரவன் அன்றோ கரணியம்! கதிரவன் மழையைத் தந்து, மழையூட்டும் பயிருக்கு வெப்பம் தந்து, அவை விளைவடைய வெயிலைத் தந்து, விருந்தோம்பிக் களிக்கும் இல்வாழ்வையே தந்துள்ளானே! என வியந்து கதிரவனைப் போற்றி மகிழ்ந்தான் தமிழன்!

பழந்தமிழர் ஞாயிற்றையும் திங்களையும் அடியாகக் கொண்டே தங்களது வாழ்வியலையும் அறிவியலையும் அமைத்துக் கொண்டார்கள். அவ்வகையில், ஞாயிற்றை அடிப்படையாகக் கொண்டு பகுக்கப்பட்ட இயற்கையின் இயக்கத்தில், எல்லா வளங்களும் நலன்களும் நிறைந்த காலமாக தைத்திங்களைக் கண்டான். எனவே, தைத்திங்கள் முதல் நாளை மாறிவரும் பருவத்தொகுப்பான ஆண்டின் பிறப்பாகக் கொண்டான். ஆண்டுப்பிறப்பன்று கதிரவனைப் போற்றும் நாளெனக் கொண்டு பொங்கிப் பொலிந்து மகிழ்ந்தான். அதுவே தைப்பொங்கல்.

கிழக்கு வெளுத்து வர, தமிழர்கள் தங்கள் வீட்டு முற்றங்களில் கோலமிட்டு, குலைவாழை நாட்டி, செங்கரும்பு கட்டி, தோரணம் சூழத் தொங்க விட்டு, வாழையும் மாவும் பலாவும் தந்த கனிகள் படைத்திருக்க, மாதுளையும் விளாவும் பிளந்திருக்க, அவற்றின் நறுமணம் மூக்கினிக்க, அடுப்பில் புது மண்பானையில் பசும் பால் பொங்கி வழிய, புத்தரிசியை இடுகின்றனர். சுற்றம் சூழ நின்று 'பொங்கலோ பொங்கல்' என்று கூவிக் களிக்கூத்தாடுகின்றனர். இது கண்டு அருகிருக்கும் தொழுவங்களில் ஆவினங்கள் தலையாட்டி 'அம்மா' எனவழைக்க, கழுத்துமணிக் கிண்கிணிகள் ஒலிக்க, அந்தக் காலை வேளையிலே இன்பம் பொங்குகிறது.

இவ்விழாவின் இனிமைக்கு இனிமை கூட்டும் விருந்தோம்பல் சிறக்க,

வேண்டியதெல்லாம் நிறைந்த இந்நாளே தைப்பொங்கல். தைப்பொங்கல் என்பது இன்பம் பொங்கும் விழாவின் தொடக்கநாள்; புத்தாண்டு முதல் நாள்; உழவர்களின் உழைப்பின் பயன் விளைந்திருக்கும் நாள். தைப்பொங்கல் உழவர்திருநாள் எனப் போற்றப்படினும், உழுவோர்க்கு மட்டும் இது உரியதல்ல. புலவர்க்கும் சரி; மறவர்க்கும் சரி; எவ்வகைத் தொழில் புரிபவர்க்கும் சரி; உழைத்து வாழும் மக்களது நன்னாளே தைப்பொங்கல் நாளாகும்.

உலகில் காணப்படும் பல்லினப் பண்பாட்டு விழாக்களிலே மிக மேன்மையான, உயர்ந்த கோட்பாடுகளைக் கொண்ட, நாகரிக முதிர்வில் விளைந்த திருநாள் தைப்பொங்கல் திருநாள் என்று காணுவதில் பெருமை கொள்வோம்.



## கீழ்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.

1. தை பிறந்ததும் பயிர்களும் கனிமரங்களும் எப்படித் தோற்றமளிக்கும்?
2. கதிரவன் எவ்வகையில் எமக்கு உதவுகிறான்?
3. பொங்கலன்று என்ன ஏற்பாடுகளைச் செய்கின்றனர்?
4. பொங்கலுக்குப் படைக்கப்படும் கனிகள் யாவை?
5. தைப்பொங்கலின் வேறு பெயர்களைத் தருக.
6. தமிழர்கள் அனைவராலும் கொண்டாடப்படும் மற்றொரு திருநாள் எது?
7. இப் பாடத்திலுள்ள மரங்களைக் குறிப்பிடுக.
8. 'பொங்கல்' பற்றி நீர் அறிந்தவற்றைக் கொண்டு கட்டுரை ஒன்றை எழுதுக.

## மொழிவளம்

### மரபுச் சொற்கள்

#### இளமைப் பெயர்கள்

ஆடு - குட்டி
யானை - கன்று
அணில் - பிள்ளை
கோழி - குஞ்சு
குரங்கு - குட்டி
மீன் - குஞ்சு
கழுதை - குட்டி
காகம் - குஞ்சு
குதிரை - குட்டி
கிளி - பிள்ளை
கீரி - பிள்ளை

தவளை - பேத்தை
சிங்கம் - குருளை
நாய் - குட்டி
பன்றி - பறழ்
புலி - குட்டி
மான் - கன்று

நெல் - நாற்று
பனை - வடலி
வாழை - குட்டி
கமுகு - பிள்ளை
தென்னை- கன்று

## விலங்குகள், பறவைகளின் ஒலிக்குரிய பெயர்கள்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கரடி | - | உறுமும். | சேவல் | - | கூவும் (சிலம்பும்) |
| பூனை | - | சீறும். | குருவி | - | கீச்சிடும். |
| யானை | - | பிளிறும். | மயில் | - | அகவும். |
| சிங்கம் | - | முழங்கும். | காகம் | - | கரையும். |
| நரி | - | ஊளையிடும். | ஆந்தை | - | அலறும். |
| நாய் | - | குரைக்கும். | கோழி | - | கொக்கரிக்கும். |
| குதிரை | - | கனைக்கும். | குயில் | - | கூவும். |
| கழுதை | - | கத்தும். | கிளி | - | பேசும். |

### பயிற்சி

1. பின்வரும் சொற்களை இணைத்துச் சொல்லியம் ஆக்குக.
   கன்று, குட்டி, பிள்ளை, முழங்கும், கூவும், கொக்கரிக்கும், பிளிறும்.
2. பின்வரும் சொற்றொடர்களைப் பொருள் புலப்படுமாறு சொல்லியங்களில் அமைத்து எழுதுக.
   பல்வரிசை, மக்கட்கூட்டம், மலைத்தொடர், மலர்ச்செண்டு, பூஞ்சோலை

# இலக்கணம்

## ஆகுபெயர்

1. தோட்டத்தில் மல்லிகை செழித்து வளர்ந்தது.
2. மங்கை மல்லிகை சூடிக் கோவிலுக்குச் சென்றாள்.

இவ்விரு சொல்லியங்களிலும் 'மல்லிகை' என்ற சொல் இடம்பெற்றுள்ளது. முதலாவது சொல்லியத்தில் இடம்பெற்றுள்ள 'மல்லிகை' என்ற சொல் செடியைக் குறிக்கிறது. அது இயற்பெயர் எனப்படும். இரண்டாவது சொல்லியத்திலே இடம்பெற்றுள்ள 'மல்லிகை' என்ற சொல் அச்செடியில் மலரும் மலரைக் குறிக்கிறது. மல்லிகை என்ற செடியின் இயற்பெயர், அச்செடியைச் சுட்டாது. அச்செடியில் மலர்ந்த மலருக்கு ஆகிவரும் போது, அது ஆகுபெயர் எனப்படும். எனவே, ஒரு பொருளின் இயற்பெயர் அதனோடு தொடர்புடைய வேறொரு பொருளுக்காக வரும்போது ஆகுபெயர்கள் பிறக்கின்றன.

பெயர்ச்சொல் பொருள், இடம், காலம், சினை, குணம் தொழில் என ஆறு வகைப்படும். அவ்வகைப் பெயர்கள் அவற்றோடு தொடர்புடைய வேறு பொருட்களுக்குப் பெயராகி வரும்போது, அறுவகை ஆகுபெயர்கள் பிறக்கின்றன.

1. கோதை முல்லை சூடிக் கோவிலுக்குச் சென்றாள்.
   முல்லை - பொருளாகுபெயர்
   மரத்தின் பெயர் மலருக்கு ஆகிவந்துள்ளது.

2. மெய்வல்லுநர் போட்டியில் இத்தாலி முதலிடம் பெற்றது.
   இத்தாலி - இடவாகுபெயர்
   இடத்தின் பெயர் வீரர்களுக்கு ஆகிவந்துள்ளது.

3. மாரி விளைந்ததால் உழவர்கள் இன்பமடைந்தனர்.
   மாரி - காலவாகுபெயர்
   காலத்தின் பெயர் பயிருக்கு ஆகிவந்துள்ளது.

4. உழவர் நெல் அறுவடை செய்தனர்.
   நெல் - சினையாகுபெயர்
   சினைப்பெயர் பயிருக்கு ஆகிவந்துள்ளது.

5. வெள்ளை அடித்து வீட்டை அழகுபடுத்தினர்.
   வெள்ளை - குணவாகுபெயர்
   குணத்தின் பெயர் (நிறத்தின் பெயர்) வண்ணப்பூச்சுக்கு ஆகிவந்துள்ளது.

6. நண்பர்கள் பொங்கல் உண்டனர்.
   பொங்கல் - தொழிலாகுபெயர்
   தொழிற்பெயர் உணவுக்கு ஆகிவந்துள்ளது.

## பயிற்சி

தடித்த சொற்களிலுள்ள ஆகுபெயர்கள் எவ்வகையென எழுதுக.

1. திருவிழாக் கடைகளில் சிறுவர் **இனிப்பு**க்காக மொய்த்தனர்.
2. கவிஞனின் துணைவி **மல்லிகை** சூடி மகிழ்ந்தாள்.
3. சிறுவனின் அறிவுத்திறமையை **ஊர்** பாராட்டியது.
4. திருவிழாவிற்கு **ஊரெல்லாம்** திரண்டு வந்தது.
5. வெற்றிவேலன் தன் தோட்டத்தில் **வெற்றிலை** நட்டான்.
6. அண்மையில் நடைபெற்ற காற்பந்தாட்டப் போட்டியில் **ஆத்திரேலியா** வென்றது.
7. இவ்வாண்டு நடந்த ஓட்டப்போட்டியில் **வெள்ளை** முதலிடம் பெற்றது.
8. மங்கை **கனகாம்பரம்** சூடியிருப்பது அழகாக உள்ளது.

பாடம் 7 **அறநெறிச்செய்யுள்கள்**

# திருக்குறள்

## வாய்மை

தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும்

பொய்யற்க - பொய்யாதீர், பொய்சொல்லாதீர்
பொய்த்தபின் - பொய்சொன்னபின்

பொருள்:

*தன்னெஞ்சு உண்மையை அறிந்திருக்க பொய்சொல்லாதீர். அவ்வாறு பொய்சொன்னால் பின் அச்செயல் குறித்து தனது நெஞ்சே தன்னை வருத்தும்.*

உண்மை அறிந்திருந்தும் அதை மறைத்துப் பொய் சொன்னால் பின் ஒருநாள் உண்மை அறிந்திருந்த அவரது உள்ளமே நீ 'குற்றவாளி என்று உள்ளத்துள்ளே சுடும். பிறர் குற்றச் சாற்றிலிருந்து தப்பலாம். ஆனால், தன் உள்ளம் குற்றம் சாற்றினால் அதிலிருந்து எவராலுமே தப்பமுடியாது'. வாணாள் முழுவதும் வருத்தும்.

உள்ளத்தால் பொய்யா தொழுகின் உலகத்தார்
உள்ளத்து ளெல்லாம் உளன்

ஒழுகின் - வாழ்ந்தால், ஒழுகினால்
உளன் - இருப்பன்

பொருள்:

*ஒருவன் தன் உள்ளம் அறிய உண்மை சொல்லி வாழ்ந்தால், உலகமக்களது உள்ளங்களில் நிலையாய் இருப்பான்.*

ஒருவன் தனது உளமறிய பொய் சொல்லாமல் உண்மை பேசி வாழுவானாகின், உலகமக்கள் அவன் பொய்பேசாதவன் என்பதைக் கண்டு அவன்மீது அன்பும் மதிப்பும் கொள்வர். அதனால் அவனுடன் விரும்பி நட்புக் கொள்வர். எனவே, எல்லார் உள்ளங்களிலும் அவனது நினைவு இருக்கும்.

மனத்தொடு வாய்மை மொழியின் தவத்தொடு
தானஞ் செய்வாரின் தலை

வாய்மை - உண்மை, தீங்கு விளைக்காத சொல்

தானம் - கொடை

தலை - உயர்வு, மேன்மை

பொருள்:

*தன் மனமறிய உண்மை பேசுவாராகின், அவர் தவமும் தானமும் ஒருங்கே செய்பவரை விட உயர்ந்தவர்.*

ஒருவர் தன் சாவின் பின்னான வாழ்வின் நலனுக்காக தவமும் பிறரின் நல்வாழ்வுக்காகத் தானமும் ஒருங்கே செய்கிறார். ஆனால், இரண்டினாலும் அவர் பெறும் நலனை விட, மனமறிய உண்மை பேசுகிறவர் உயர்ந்த நலனுடையவர்.

பொய்யாமை அன்ன புகழில்லை எய்யாமை
எல்லா அறமும் தரும்

பொய்யாமை - பொய் சொல்லாமை

எய்யாமை - அறியாமை

பொருள்:

*பொய்சொல்லாமை போன்ற புகழ் வேறில்லை. அது அவரறியாமலே எல்லா அறப்பயனையும் கொடுக்கும்.*

ஒருவருக்குப் பொய் சொல்லாமல் உண்மையே பேசி வாழ்தலில் கிடைக்கிற புகழுக்கு நிகரான புகழ் வேறு இல்லை. அப்புகழ் அவரையறியாமலே எல்லா அறங்களாலும் கிடைக்கின்ற பயனையெல்லாம் அவருக்குத் தேடித்தரும்.

பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று

பொருள்:

*பொய்சொல்லாமை பொய்த்துவிடாமல் வாழ்ந்தாலும் பிற அறங்களைச் செய்யாமையைச் செய்யாதிருத்தல் நன்று.*

ஒருவர் பொய்சொல்வதில்லை என்ற கொள்கை பொய்த்துவிடாமல் வாழ்ந்தால் அவர் பிற அறங்களைச் செய்யாமலே எல்லா நலன்களும் விளையும். எனினும், பிற அறங்களையும் செய்தால் அது மிகவும் நன்று.

புறத்தூய்மை நீரான் அமையும் அகத்தூய்மை
வாய்மையால் காணப் படும்

புறத்தூய்மை - உடற்றூய்மை
அகத்தூய்மை - உள்ளத்தூய்மை

பொருள்:

*உடலின் தூய்மை நீரினாலாகும். உள்ளத்தின் தூய்மை உண்மை பேசுவதால் தெரியும்.*

ஒருவருடைய உடலை நீரால் கழுவி தூய்மையாக்கலாம். உடல் தூய்மையாய் இருப்பது பிறரது கண்ணுக்குத் தெரியும். உள்ளத்தின் தூய்மை பிறரின் கண்ணுக்குத் தோற்றாது. அது அவர் உண்மை பேசுவதாலேயே பிறருக்குத் தெரியவரும்.

எல்லா விளக்கும் விளக்கல்லச் சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு

பொருள்:

*(இருளை நீக்கும்) எல்லா விளக்குகளும் விளக்கு அல்ல. சான்றோர்களுக்கு பொய்யாமை என்னும் விளக்கே விளக்காகும்.*

சான்றோருக்கு புறத்திருளை நீக்குகிற விளக்கு எல்லாம் உண்மையான விளக்கல்ல. அவர்களைப் பொறுத்தமட்டில் உண்மையான விளக்கு எது வென்றால், பொய் பேசாது உண்மை பேசுவதால் கிடைக்கிற புகழ் என்னும் விளக்கே விளக்காகும். விளக்கு இருளை நீக்கிப் பொருட்களை விளக்கமாகக் காட்டுவது. புகழ் ஒருவரை உலகத்துக்கு இன்னாரெனத் தெரியும்படி காட்டுவது.

யாமெய்யாக் கண்டவற்றுள் இல்லை எனைத்தொன்றும்
வாய்மையின் நல்ல பிற

பொருள்:

*நாங்கள் உண்மையாய்க் கண்டவற்றுள் வாய்மையிலும் சிறந்ததான வேறொன்றும் இல்லை.*

நாங்கள் உண்மையாகக் கண்டு உணர்ந்திருக்கின்ற அறங்களில் எல்லாம், வாய்மையை விடச் சிறந்ததான அறம் வேறு ஒன்றும் இல்லை.

## நட்பு

செயற்கரிய யாவுள நட்பின் அதுபோல்
வினைக்கரிய யாவுள காப்பு

நட்பின் - நட்பினைப்போல்
காப்பு - துணை

பொருள்:

*செய்வதற்கு அருமையான செயல் வேறென்ன உண்டு நட்புக் கொள்வதுபோல்? அந்த நட்புப் போல் வேறென்ன உண்டு துணை?*

நல்ல நட்பைத் தேடி நட்புக்கொள்வது போல் சிறந்த செயல் வேறொன்றும் இல்லை. அத்தகைய நட்பைப்போல வேண்டிய நேரத்தில் கைகொடுத்து உதவக்கூடிய துணை வேறொன்றுமில்லை.

நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்நீர பேதையார் நட்பு

நீரவர் - தன்மையர் கேண்மை - நட்பு
நீர - தன்மைய பேதையர் - அறிவிலார்

பொருள்:

*நிறைந்த நீர் போன்ற தன்மையுடையாரது நட்பு பிறைமதி போன்றது. முழுமதிக்குப் பின்னுள்ள தன்மையது அறிவிலார் நட்பு.*

அறிவுடைய மேலோர் நட்பு வளர்பிறைத் தன்மையுடையதாய் மேன்மேலும் வளர்ந்து செல்லும். அறிவில்லாத கீழோர் நட்பு தேய்பிறைத் தன்மையுடையதாய் வரவரத் தேய்ந்து போகும்.

நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்
பண்புடை யாளர் தொடர்பு

நவிலல் - கற்றல் நவில்தொறும் - கற்கக்கற்க
பயிலல் - பழகுதல் பயில்தொறும் - பழகப்பழக

பொருள்:

*நூலானது கற்கக்கற்க மிகும் பயன்போல, பழகப்பழக பயன்தரும் பண்புடையவர்களது தொடர்பு.*

ஒரு நூலைத் திரும்பத் திரும்பப் படிக்கும்போது புதிய புதிய கருத்துகள் விளங்கி, அந்த நூலினால் நாம் பெறும் பயன் அறிவு வளர்ச்சியைத் தரும். அதுபோன்றே அறிவினால் பண்புடையோராய் விளங்குபவர்களுடன் நாம் கொள்கின்ற நட்பானது பழகப் பழக பெரும் பயனைத் தரும்.

நகுதற் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண்
மேற்சென்று இடித்தற் பொருட்டு

நட்டல் - நட்புக்கொள்ளல் நகுதல் - சிரித்தல்.
இடித்தல் - கண்டித்தல் மிகுதிக்கண் - அளவுமீறியவிடத்து

பொருள்:

*சிரிப்பதற்காக அல்ல நட்புக் கொள்வது, அளவு மீறியவிடத்து பொறுப்புடன் இடித்துரைப்பதற்கே.*

ஒருவருடன் நட்புக் கொள்வது அவருடன் சிரித்து மகிழ்வதற்காக அல்ல. நண்பர் அறந் தவறிய செயல்களில் ஈடுபட்டால் பொறுப்புடன் அவரைக் கண்டித்துரைத்துத் திருத்துவதற்கேயாகும்.

முகம்நக நட்பது நட்பன்று நெஞ்சத்து
அகம்நக நட்பது நட்பு

நக - மலர, சிரிக்க முகம்நக - முகம் மலர
நட்பது - நட்புக்கொள்வது அகம்நக - உள்ளம் மலர

பொருள்:

*முகம் மட்டும் சிரிக்க நட்புக் கொள்வது நட்பல்ல. நெஞ்சத்தின் உள்ளம் சிரிக்க நட்புக்கொள்வதே நட்பு.*

உள்ளத்திலே மகிழ்ச்சி தோன்றாமல் முகத்திலே மட்டும் மலர்ச்சி தோன்ற நட்பாடுவது உண்மை நட்பல்ல. முகத்தோடு அகமும் மகிழ்ந்து மலர நட்பாடுவதே சிறந்த நட்பாகும்.

உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு

உடுக்கை - உடை

இடுக்கண் - பேரிடர், துன்பம்

களைவது - நீக்குவது, அகற்றுவது.

பொருள்:

*உடுப்பு அவிழ்கிறவனின் கைபோல் விரைந்து அவ்விடத்திலே துன்பத்தை நீக்குவதே நட்பு.*

ஒருவனுடைய ஆடை அவிழ்கிறபோது அவனுடைய கை மானத்தைக் காக்க யாரும் சொல்லாமலே விரைந்து ஆடையைப் பற்றிப்பிடிக்கும். அதுபோல, நண்பருக்குத் துன்பம் விளைந்த அக்கணமே அவர் கேளாமலே விரைந்து உதவி, அவரது துன்பத்தை நீக்குவதே உயர்ந்த நட்பாகும்.

## கீழ்வரும் வினாக்களுக்கு விடை தருக.

1. உண்மை பேசுபவனின் சிறப்புகள் மூன்று தருக.
2. உண்மை பேசுவதனால் ஏற்படும் நன்மை இரண்டு எழுதுக.
3. பொய் பேசுவதனால் ஏற்படும் தீங்கு யாது?
4. உள்ளம் எதனால் தூய்மையாகும் எனக்கூறப்படுகிறது?
5. உள்ளத்தில் இருளை நீக்குவது எது?
6. அறிவுடையாரோடு கொள்ளும் நட்பு எத்தகையது?
7. நட்பின் சிறப்புகள் மூன்று எழுதுக.
8. உண்மையான நட்பு எப்படி இருக்கவேண்டும்?

## மொழிவளம்

ஒரு கருத்தை வலியுறுத்தும் நோக்கில் ஓசை நயத்துடனும் ஒத்தபண்புத் தொடர்புடனும் இசைந்து வருதல் இணைமொழி எனப்படும். இவை தொன்றுதொட்டு வழங்கி வருவனவாகும்.

## இணைமொழி

| | |
|---|---|
| அக்கம்பக்கம் | ஈன இரக்கம் |
| உண்டு உடுத்து | ஊணும் உறக்கமும் |
| எலும்புந்தோலும் | ஏட்டிக்குப்போட்டி |
| முட்டிமோதி | குறைகுற்றம் |
| கூடிக்குலாவி | சாக்குப்போக்கு |
| சீருஞ்சிறப்பும் | சுற்றும் முற்றும் |
| சூதுவாது | தப்பித்தவறி |
| நடையுடை | பட்டம்பதவி |
| போற்றிப் புகழ்ந்து | வீரதீரம் |

### பயிற்சி

பின்வரும் இணைமொழிகளை வைத்து, பொருள் புலப்படுமாறு சொல்லியங்கள் எழுதுக.

எலும்புந்தோலும், பட்டம்பதவி, நடையுடை, முட்டிமோதி, கூடிக்குலாவி, அக்கம்பக்கம், ஆறஅமர, தப்பித்தவறி.

# இலக்கணம்

## தெரிநிலைவினை

1. குந்தவை பாட்டியுடன் பூங்காவிற்குச் சென்றாள்.
2. மாதவி வீணை மீட்டுகிறாள்.
3. பொங்கலுக்கு அப்பா விடுமுறையில் வீட்டுக்கு வருவார்.

மேலே தரப்பட்ட எடுத்துக்காட்டுகளில் சென்றாள், மீட்டுகிறாள், வருவார் ஆகிய வினைகள் காலத்தை வெளிப்படையாகக் காட்டுகின்றன.

| | | |
|---|---|---|
| சென்றாள் | - | இறந்தகாலம் |
| மீட்டுகிறாள் | - | நிகழ்காலம் |
| வருவார் | - | எதிர்காலம் |

இவ்வாறு வெளிப்படையாகக் காலங் காட்டும் வினைகள் தெரிநிலைவினை எனப்படும்.

## தெரிநிலைவினை வினைமுற்றுகள் காலம் உணர்த்தல்

1. கண்மணி மலரைக் கொய்தாள். - கொய் + த் + ஆள்
2. வாணி மாங்கனி உண்டாள். - உண் + ட் + ஆள்
3. இனியன் சுற்றுலாச் சென்றான். - செல் + ற் + ஆன்
4. கொற்றவன் பாட்டுப் பாடினான். - பாடு + இன்+ ஆன்
5. தேன்மொழி கடற்கரைக்குப் போனாள். - போ + ன் + ஆள்

இச்சொல்லியங்களிலுள்ள வினைமுற்றுகள் இறந்தகாலத்தைக் காட்டி நிற்கின்றன. இவ்வினைமுற்றுகளில் அமைகின்ற த், ட், ற், இன், ன் ஆகிய இடைநிலைகளே இறந்த காலத்தை உணர்த்துகின்றன.

1. பூங்குழலி நூலகத்திற்குச் செல்கிறாள். - செல் + கிறு +ஆள்
2. மாணவர் ஓவியம் வரைகின்றனர். - வரை + கின்று + அன் + அர்

இச்சொல்லியங்களில் உள்ள வினைமுற்றுகளில் அமைகின்ற கிறு, கின்று ஆகிய இடைநிலைகள் நிகழ்காலத்தைக் காட்டுகின்றன.

1. சங்கவி நன்றாகப் படிப்பாள். - படி + ப் + ப் + ஆள்
2. பூங்குன்றன் விரைவாக ஓடுவான். - ஓடு + வ் + ஆன்
3. இக்குருவிக் குஞ்சு சிறகு முளைத்தபின் பறக்கும். - பற + க் + க் + உம்

இச்சொல்லியங்களில் அமைகின்ற ப், வ் ஆகிய இடைநிலைகளும் 'உம்' எனும் விகுதியும் எதிர்காலத்தை உணர்த்தி நிற்கின்றன. எனவே தெரிநிலைவினை வினைமுற்றுகள் இடைநிலைகளால் இறந்த காலத்தையும் நிகழ்காலத்தையும் உணர்த்துகின்றன. இடைநிலைகளாலும் 'உம்' விகுதியாலும் எதிர்காலம் உணர்த்தப்படும்.

## பயிற்சி

1. பின்வரும் சொல்லியங்களிலுள்ள தெரிநிலைவினைமுற்றுகள் உணர்த்தும் காலங்களைத் தருக.

   அ. சிட்டுக்குருவி விரைவாகப் பறக்கிறது.
   ஆ. பறவைகள் உயரஉயரப் பறந்தன.
   இ. வேழன் ஓவியப்போட்டியில் பங்குபற்றுவான்.
   ஈ. தமிழினி வண்ணனைக் கட்டுரை எழுதினாள்.
   உ. வருகிற திங்கள் எங்கள் சிற்றூருக்குப் பேருந்து ஓடும்.

2. பின்வரும் வினையடிகளை வைத்து, முக்காலமும் உணர்த்தும். வினைமுற்றுகளை எழுதுக.

   திற, அழு, விளையாடு, படி, பாடு.

பாடம் 8

# பாரதியின் புதுமைப்பெண்

தமிழகத்திலே மிக நீண்டகாலமாகவே பார்ப்பனீயத்தின் மேலாண்மை கரணியமாக, பெண்களின் நிலை கவலைக்குரியதாக இருந்து வந்தது. பெண்கள் இழிபிறவிகள், தீயவர்கள் அவர்கள் கல்வி கற்கக்கூடாது: கணவனுக்குப் பணிவிடை செய்வதும் பிள்ளை பெற்று வளர்ப்பதுமே அவர்களது வேலை என்று கருதப்பட்டது. ஆங்கிலேயருடைய ஆட்சிக் காலத்திற் கூட, இந்தப் பார்ப்பனீய அடிமைத் தளையிலிருந்தும் குமூகக் கொடுமைகளிலிருந்தும் தமிழகம் விடுபட முடியாமலிருந்தது. அந்தளவிற்கு ஆரியம் குமூக அடக்குமுறையை ஏற்படுத்தி இருந்தது. குழந்தைத் திருமணம் என்ற நாகரிகமற்ற கொள்கையைப் பரப்பி சிறுவர் சிறுமியருக்கு மணம் செய்து வைக்கப்பட்டது. சிறுமி பெரிய பெண் ஆகுமுன் அந்தச் சிறுவன் இறந்துவிட்டால் அந்தச் சிறுமி கைம்பெண் என்று கொடுமைப் படுத்தப்பட்டாள். கைம்பெண்கள் தீண்டத்தகாதோர் என ஒதுக்கப்பட்டனர். விதவைத் திருமணம் தடுக்கப்பட்டது. இந்துத்துவ மூடக் கொள்கைகளாலும் தமிழர் மீது ஏற்பட்ட பல்லினப் பண்பாட்டுப் படையெடுப்புகளாலுமே தமிழ்ப் பெண்களுக்கு இந்த இழிநிலை ஏற்பட்டது. எனினும், இந்நிலை ஈழத்தில் அவ்வளவு மோசமாக வேரூன்றவில்லை.

நாகரிக உலகின் பொற்காலம் என்று சொல்லப்பட்ட இருபதாம் நூற்றாண்டில் கூட இந்த இழிநிலை நிலவியது. பெண்களின் வாழ்வில் இருள் சூழ்ந்திருந்த இக்கால கட்டத்திலே அவ்விருளை நீக்கும் நிலவாக மகாகவி பாரதி தோன்றினான். அல்லற்பட்டு ஆற்றாது அழுது நின்ற பெண்களுக்கு விடுதலை தேடித் தருவதைக் குறிக்கோளாகக் கொண்டு பல பாடல்களைப் பாடினான். மக்களின் அறியாமை என்னும் நீள்துயில் நீக்கப் பாடவந்த பாரதி, தன் பாட்டுத் திறத்தால் பெண்களுக்குப் பெருமையையும் விடுதலையையும் பெற்றுத் தரமுனைந்தான்.

## பெண்ணுரிமைக்கான குரல்

“மாதர் தம்மை இழிவு செய்யும் மடமையைக் கொளுத்துவோம்” என்று சீறியெழுந்த பாரதியின் சீற்றம் பெண்களுடைய உரிமைக் குரலுக்கான அடித்தளமாக அமைந்தது. இதன் பேறாகப் பெண்கள் நாட்டின் கண்கள், இழிந்தவர்கள் அல்லர் என்ற கருத்து நாட்டில் உருவாகியது.

*பெண்ணுக்குள்ளே பேரறிவை வைத்துப் படைத்தான், இந்த உலகத்தைப் பேணி வளர்க்கிற இறைவன். இந்த மண்ணிலே வாழுகின்ற சில மூடர், பெண்களுடைய அந்த நல்ல அறிவை அழித்தனர்.*

பெண்ணுக்குள் ஞானத்தை வைத்தான் - புவி
பேணி வளர்த்திடும் ஈசன்
மண்ணுக்குள்ளே சிலமூடர் - நல்ல
மாதர் அறிவைக் கெடுத்தார்

என்று பாடினான் பாரதி. பெண்களின் அறிவைக் கெடுத்து, அவர்களைப் பேசாமடந்தைகளாக ஆக்கிய மூடர்களை அவன் சாடினான். பாரதியின் ஆர்ப்பரிப்பு நியாயமானது. ஏனெனில், ஆண்களைப் போன்றே, பெண்களும் அறிவும் ஆற்றலும் நிறைந்தவர்களாக இருத்தல் வேண்டும் என்பது இயற்கையின் நியதியன்றோ!

நாட்டின் விடுதலையே அக்கால கட்டத்தில் முக்கியமானதாகக் கருதப் பட்டது. 'என்று தணியும் இந்த சுதந்திர தாகம்' என்று பாடிய பாரதி, நாட்டு விடுதலை மட்டுமன்றி, வீட்டுவிடுதலையும் வேண்டுமென்று பாடினான். வீட்டிலே பெண்கள் வெறும் அடிமைகளாக, உரிமை இழந்தவர்களாக வாழ்வதைக் கண்டு உள்ளம் குமுறினான். பெண்கள் கற்பதும் வெளியே செல்வதும் குற்றமென்ற கருத்தினைப் பாரதி ஏற்றுக் கொள்ளவில்லை. எனவே, அவன் பாவையரின் அடிமைத்தளை நீங்கக் குரல் கொடுத்தான்.

*நூல்களைப் பெண்கள் கையால் தொட்டாலே பெருந்தீமை விளையுமென்று எண்ணியிருந்த மூடர்கள் அழிந்துபோயினர். (பெண்ணை வீட்டுக்கு வெளியில் விட்டால் நடத்தை கெடுவாள்) அவளை வீட்டுக்குள் பூட்டி வைப்போம் என்ற வியப்பிற்குரிய மாந்தர் தலைகுனிந்து நிற்கின்றனர்.*

ஏட்டையும் பெண்கள் தொடுவது தீமையென்று
எண்ணியிருந்தவர் மாய்ந்து விட்டார்
வீட்டுக்குள்ளே பெண்ணைப் பூட்டி வைப்போமென்ற
விந்தை மனிதர் தலைகவிழ்ந்தார்

பெண்களும் ஆண்களைப் போன்று ஆற்றல் நிறைந்தவர்களாக இருத்தல் வேண்டும். பெண்கள் பேசாமடந்தைகளாக, அஞ்சி ஒதுங்குபவர்களாக ஆக்கப்பட்டிருந்தனர். இதனால், அடிமைகளாக உரிமை இழந்தவர்களாக வாழ்வதைக் கண்டு வெகுண்டான் பாரதி. பெண்கள் கற்பதும் வெளியே

செல்வதும் குற்றம் என்ற பார்ப்பனீயக் கருத்தினை பாரதி ஏற்றுக் கொள்ளவில்லை.

*மாட்டை அடித்து அடக்கி மாட்டுக்கொட்டிலில் கட்டும் பழக்கத்தைக் கொண்டு வந்து, வீட்டிலே எம்மையும் கட்டி வைக்க முற்பட்ட மாந்தரது செயல்களை வெட்டி விட்டோம் என்று கும்மியடி.*

மாட்டை அடித்து வசக்கித் தொழுவினில்
மாட்டும் வழக்கத்தைக் கொண்டு வந்தே
வீட்டினி லெம்மிடங் காட்ட வந்தாரை
வெட்டி விட்டோ மென்று கும்மியடி!

என்று பாடி அடிமைத்தளைகளை உடைப்பதற்கான துணிவைப் பெண் களுக்கு ஊட்டினான்.

## பெண்களும் கல்வியும்

பெண் வீட்டிற்குள் முடங்கிக் கிடக்காமல் துணிவுடன் வெளியே வர வேண்டும்; கல்வி கற்கவேண்டும்; அறிவைப் பெறவேண்டும்; அதிகாரத் துக்கு வரவேண்டும்; சட்டங்கள் செய்யவேண்டும்; நாட்டை ஆளவேண்டும். ஆற்றலிலும் அறிவிலும் ஆணுக்குப் பெண் சற்றும் குறைந்த வளில்லை என்று முழங்கினான் பாரதி.

*பட்டங்களைப் பெற்று நாட்டை ஆள்வதும் நாட்டை நல்வழிப்படுத்தும் சட்டங்களைச் செய்வதும் இந்த உலகில் பெண்கள் நாங்கள் செய்ய வந்திருக்கின்றோம். கல்விகளால் எட்டக் கூடிய அறிவினிலே, ஆணுக்குப் பெண் குறைந்தவளில்லை என்று சொல்லிக் கும்மியடியுங்கள் பெண்களே!*

*தன்னை விரும்புகிற ஒருவனைத் தானும் காதலித்து, அவனைத் திருமணம் செய்து, அவனது செயல்கள் எல்லாவற்றிலும் துணையாய் நின்று உதவி, பெண்களுக்குரிய அறச்செயல்களைப் பழைய காலத்தைக் காட்டிலும் சிறப்புப் பெறும்படி செய்து வாழ்வோமடி பெண்ணே!*

பட்டங்கள் ஆள்வதும் சட்டங்கள் செய்வதும்
பாரினில் பெண்கள் நடத்த வந்தோம்
எட்டும் அறிவினில் ஆணுக்கிங்கே பெண்
இளைப்பில்லைக் காணென்று கும்மியடி!

காதலனொருவனைக் கைப்பிடித்தே யவன்
காரியம் யாவினும் கைகொடுத்து
மாத ரறங்கள் பழைமையைக் காட்டிலும்
மாட்சிபெறச் செய்து வாழ்வமடி!

பெண்கள் படிக்க வேண்டும்; அப்படிப்பின் மூலம் பாரெல்லாம் மாட்சிபெறச் செய்ய வேண்டும் என்பது பாரதியாரின் கருத்தாயிருந்தமையை இப் பாடல்கள் எமக்கு எடுத்துக் காட்டுகின்றன.

## அச்சம் தவிர்த்தால் அறிவு ஓங்கும்

பெண்கள் காலங்காலமாகவே மகளாய், தங்கையாய், மனைவியாய் ஓர் ஆணின் காவலிலேதான் வாழவேண்டும் என்று பழக்கப்படுத்தப்பட்டு இருந்தனர். அப்பழக்கத்தை அவர்கள் பற்றிக்கொண்டு வீட்டிற்கு வெளியே வர அஞ்சியவர்களாக வாழ்ந்து வந்தனர். அதைக்கண்டு பாரதி,

அச்சமில்லை அச்சமில்லை அச்சமென்பதில்லையே!
உச்சிமீது வானிடிந்து வீழுகின்ற போதிலும்
அச்சமில்லை அச்சமில்லை அச்சமென்பதில்லையே!

என்று பாடினான். பாரதியினுடைய இந்த முழக்கம் கேட்டுப் பெண்ணுலகம் சிலிர்த்து நிமிர்ந்தது. மூடர்களின் அடக்குமுறையை எதிர்த்துப் போர்க்கொடி தூக்கிற்று. பெண்விடுதலையை ஓங்கி ஒலித்தது.

*அதைக்கண்டு, பெண்கள் ஆண்களின் அடிமைகள் என்ற நிலைமை மாறி, ஆண்களோடு பெண்களும் சரிநிகராக வாழ்வோம் இந்த நாட்டிலே!*

தாதரென்ற நிலைமைமாறி ஆண்களோடு பெண்களும்
சரிநிகர் சமானமாக வாழ்வமிந்த நாட்டிலே!

என்று பாடி, பெண்கள் அடைய வேண்டிய நிலையைக் காட்டினான். பழைமையிலும் மூடப்பழக்க வழக்கங்களிலும் மூழ்கிக் கிடந்த, பெண்களின் விடுதலை கண்டு தயங்கிய ஆண்களுக்கு அறிவுரைக்கிறான் பாரதி.

*ஆண் உயர்ந்தவன்; பெண் இளைத்தவள் என்பதைவிட்டு, ஆணும் பெண்ணும் ஒருவருக்கொருவர் அறிவிலும் செயலிலும் நிகர் என்று கொண்டால், அறிவிலே ஓங்கி இவ்வுலகம் வளர்ந்து முன்னேறும்.*

ஆணும் பெண்ணும் நிகரெனக் கொள்வதால்
அறிவிலோங்கி இவ்வையகம் தழைக்கும்.

என்றான் அறிவினால் வந்த நல்ல அறவாழ்வும் எவர்க்கும் அஞ்சாத விடுதலை வாழ்வும் கைக்கொள்ளல் நற்குடிப் பெண்களின் குணங்களாகும்.

ஞான நல்லறம் வீர சுதந்திரம்
பேணு நற்குடிப் பெண்ணின் குணங்களாம்

என்று பாடி, தயங்கிய பெண்களுக்கு தெளிவு ஊட்டினான். அறிவு; அதனால் பெற்ற ஒழுக்கம்; அஞ்சாத விடுதலை உணர்வு. இவையே நற்பண்பைப் பேணுகிற நற்குடிப் பெண்டிரின் குணங்கள். பாரதியின் எண்ணத்திலே தோன்றிய புதுமைப்பெண் அறிவொளி படைத்த கண்ணினள்; அஞ்சாத உறுதிகொண்ட நெஞ்சினள்.

தலைகுனியாது நிமிர்ந்த நடையும் ஆணுடன் பேசும்போது குனியாமல் நேரே பார்ப்பதும் உலகில் மூடர்களுக்கோ பெண்ணடிமை பேசுபவர்களுக்கோ அஞ்சாது வாழ்கின்ற மிடுக்குடைய அறிவுச் செருக்கும் இருப்பதால், சிறப்புடைய பெண்கள் தமக்குரிய பண்புகளிலிருந்து மாறுபடுவதில்லை. அறியாமை என்னும் பெரும் இருளில் மூழ்கி, ஆண்களிடம் அடிமைப்பட்டு இன்னலுற்று, கல்வி அறிவின்றி வாழும் வாழ்கையை, சீ! என்று காறித்துப்பிவிட்டு வாழுதல் பெண்மைக்குரிய அறந்தான் என்று புத்துலகப் பண்பாடெனும் கன்னி சொல்வதைக் கேட்டீர்களா!

நிமிர்ந்த நன்னடை நேர்கொண்ட பார்வையும்
நிலத்தில் யார்க்கும் அஞ்சாத நெறிகளும்
திமிர்ந்த ஞானச் செருக்கு மிருப்பதால்
செம்மை மாதர் திறம்புவதில்லையாம்
அமிழ்ந்து பேரிரு ளாமறி யாமையில்
அவலமெய்திக் கலையின்றி வாழ்வதை
உமிழ்ந்து தள்ளுதல் பெண்ணறமாகுமாம்
உதயகன்னி உரைப்பது கேட்டிரோ!

புதுமைப் பெண்ணை, நிமிர்ந்த நன்னடையும் நேரான பார்வையுமுடையவள் என்கிறான் பாரதி. பாரதியின் புதுமைப்பெண் பல்கலையும் தொழில்நுட்பங்களும் கற்றவளாக இருப்பாள்; பன்னூல்களையும்

படித்திருப்பாள்; உலகின் நாற்றிசை நாடுகள் யாவற்றின் புதுமைகளையும் தன் நாட்டிற்குக் கொண்டு வருவாள்; தான் கற்றவற்றை மற்றவர்க்கும் எடுத்துக் காட்டித் தன் தாய்நாட்டிற்காக உழைப்பாள்; குமூகத்தை விட்டு விலகி வீடே தஞ்சமென்று வாழும் பெண்களைத் தடுத்து, அவர்களைத் தான் பிறந்த குமூகத்துக்குப் பயனுள்ளவளாக வாழ வைப்பாள். பாரதியின் இக்குறிக்கோட் பார்வை படிக்கப் படிக்க உணர்வூட்டுவதாகும்.

## கீழ்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.

1. பாரதியார் வாழ்ந்த காலத்தில் பெண்களின் நிலை எவ்வாறு இருந்தது?
2. பெண்களின் அறிவைக் கெடுத்து அவர்களைப் பேசாமடந்தைகளாக்கிய மூடர்களைப் பாரதியார் எவ்வாறு சாடினார்?
3. பெண்களின் அடிமைத்தளை நீங்கிடப் பாரதியார் எவ்வாறு குரல் கொடுத்தார்?
4. பெண்கள் மாட்சிபெற்று விளங்க வேண்டும் என்பதில் பாரதியார் கொண்டிருந்த ஆர்வம் எவ்வாறு விளங்குகிறது?
5. ‘ஆணும் பெண்ணும் நிகரெனக் கொள்வதால் அறிவிலோங்கி இவ்வையம் தழைக்கும்’ இவ்வடியின் மூலம் நீர் விளங்கிக் கொள்வதென்ன?
6. பாரதி கண்ட புதுமைப் பெண் எப்படிப்பட்டவள் என்பதை எடுத்துக்காட்டுக.
7. ‘அமிழ்ந்து பேரிருளாம் அறியாமையில்
   அவலமெய்திக் கலையின்றி வாழ்வதை
   உமிழ்ந்து தள்ளுதல் பெண்ணறமாகுமாம்’

   இவ்வரிகளைப் படிக்கும் போது உமது உள்ளத்தில் தோன்றும் உணர்வு யாது?
8. பாரதியின் புதுமைப்பெண்ணைப் பற்றி நீர் என்ன கருதுகிறீர்?

## சொற்பொருள்

| | | |
|---|---|---|
| தாதர் | - | அடிமையர் |
| மாய்ந்து | - | அழிந்து |
| தலைகவிழ்தல் | - | நாணிக்குனிதல் |
| வசக்கி | - | அடக்கி, வயப்படுத்தி |
| தொழுவம் | - | மாடுகட்டும் கொட்டில் |
| மாட்சி | - | மேன்மை |
| வையகம்,வையம் | - | உலகம் |
| திமிர்வு | - | மிடுக்கு |
| திறம்புவது | - | தடுமாற்றம் |

## மொழிவளம்

### மரபுத்தொடர்கள்

மரபுத்தொடர்கள் நேர்ப்பொருளை உணர்த்தாமல் குறிப்பாக உட்பொருள் ஒன்றை உணர்த்தி, தொன்றுதொட்டு வழங்கி வருவது.

1. அள்ளி இறைத்தல் - அளவின்றிச் செலவழித்தல்
2. ஆழம் பார்த்தல் - ஒருவரின் தன்மை பற்றி அறிதல்
3. இரண்டு தோணியில் கால் வைத்தல் - ஒரே நேரத்தில் இரண்டு செயல்களில் ஈடுபடல்
4. தோள்கொடுத்தல் - உறுதுணையாக நின்று உதவுதல்.
5. வாய்காட்டல் - அடக்கமின்றிப் பேசுதல்.
6. ஏட்டுச்சுரைக்காய் - வாழ்வோடு தொடர்பில்லாத கல்வி
7. ஒற்றைக் காலில் நிற்றல் - விடாப்பிடி
8. ஓட்டைவாயன் - வெளிப்படையாகப் பேசுபவன்
9. தலைகவிழ்தல் - பேச வாய் எழாது நிற்றல்
10. நாக்குத் தெறிக்கப் பேசுதல் - மூத்தோரை இகழ்ந்து பேசுதல்

## பயிற்சி

பின்வரும் மரபுத்தொடர்களை அவற்றின் குறிப்புப் பொருள் விளங்குமாறு சொல்லியங்கள் எழுதுக.

| | | |
|---|---|---|
| ஆழம்பார்த்தல் | தோள்கொடுத்தல் | வாய்காட்டுதல் |
| தலைகவிழ்தல் | ஓட்டைவாயன் | ஒற்றைக்காலில் நிற்றல் |

எ-கா : எனது தம்பி இனிப்பு வாங்கித் தருமாறு ***ஒற்றைக்காலில்*** நின்றான்.

## இலக்கணம்

### எச்சவினைகள் (குறைவினை)

வேறு ஒரு சொல்லை எஞ்சி நிற்காமல் தன்னளவில் பொருள் முடிவுபெற்று நிற்கும் வினை முற்றுவினை என்றும் முற்றுப்பொருள் தர பிறிதொரு சொல்லை எஞ்சி நிற்கும் வினை குறைவினை என்றும் முன்பு கற்றீர்கள். குறைவினை எச்சவினை எனவும் அழைக்கப்படும். குறைவினை பெயரெச்சம், வினையெச்சம் என இருவகைப்படும்.

## பெயரெச்சம்

### இறந்தகாலப் பெயரெச்சம்

எ-கா :

படித்த இளைஞர் பண்பாகப் பேசினர்.
( படி+த்+த்+அ )

காலை உணவை உண்ட சிறுவன் சுறுசுறுப்பாக விளையாடினான்.
( உண்+ட்+அ )

## நிகழ்காலப் பெயரெச்சம்

எ-கா:

அவர் எழுதுகிற தொடர்கதை முடிவுக்கு வருகிறது.
( எழுது + கிறு + அ )

ஓடுகின்ற சிறுவர் திரும்பிப் பார்க்கின்றனர்.
( ஓடு + கின்று + அ )

## எதிர்காலப் பெயரெச்சம்

எ-கா:

நன்றாகப் படிக்கும் மாணவர்கள் தேர்வில் திறமையாகத் தேர்ச்சியடைவர்.
(படி + க் + க் + உம்)

கடினமாக உழைக்கும் மாந்தர் உயர்நிலை அடைவர்.
(உழை + க் + க் + உம்)

இறந்தகால, நிகழ்காலப் பெயரெச்சங்கள் முறையே த், ட், ற், இன், ன், கிறு, கின்று என்னும் கால இடைநிலைகளோடு அகர விகுதி பெற்று வருவன. எதிர்காலப் பெயரெச்சங்கள் 'உம்' விகுதி பெற்றுவரும். 'உம்' விகுதியே எதிர்காலம் உணர்த்தும்.

## வினையெச்சம்

எ-கா:

குறிஞ்சி பள்ளியிலிருந்து ஓடி வந்தாள்.
குழந்தை தவழ்ந்து வருகிறது.
நண்பன் அவ்வூருக்கு நாளைக்குப் போய் வருவான்.

தடித்த எழுத்தில் காட்டப்பட்டுள்ள சொற்கள் வினையெச்சங்கள். வினையெச்சங்களைத் தொடர்ந்து வரும் வினைமுற்றுச்சொல் உணர்த்தும் காலமே, வினையெச்சத்தின் காலமாகும். வினையெச்ச விகுதிகளாக இ, உ, ய் என்பன இடம்பெறும்.

# எதிர்மறை எச்சங்கள்

## எதிர்மறைப் பெயரெச்சம்

எ-கா 1: படியாத இளைஞர் வேலையின்றித் திரிகின்றனர்.

## எதிர்மறைவினையெச்சம்

எ-கா 2: பல்லவன் பள்ளிக்கு உணவு உண்ணாது சென்றான்.

முதலாம் சொல்லியத்தில் உள்ள படியாத என்ற சொல் எதிர்மறைப் பெயரெச்சம். அது குறைவினையாக, எதிர்மறைப் பொருள் தருவதால் எதிர்மறைப் பெயரெச்சம் எனப்படும்.

இரண்டாம் சொல்லியத்தில் உள்ள உண்ணாது என்ற சொல் எதிர்மறை வினையெச்சமாகும். அது வினைச்சொல்லைக் கொண்டு முடிந்து, எதிர்மறைப் பொருள் தருவதால் எதிர்மறை வினையெச்சம் எனப்படும்.

வீடே பயத்தில் உறைந்து போயிருந்தது... அனைத்து முகங்களும் உயிரிழந்து... அச்சம் தோய அம்மாவின் குரல் ஏங்கிப்போய் அமைதியைக் குலைத்தது.

"என்னடா தம்பி செய்வம்..."

"என்னத்தச் செய்ய... இப்பிடியே கிடந்து சாகிறதுதான்...."

அழுகையில் உடைந்தது அக்காவின் குரல்.

"விசர்க் கதை...." நான் அவர்களைத் தேற்ற முனைந்தேன்.

"சந்தியில விழுந்த செல் எங்கட வீட்டுக்கு வர எவ்வளவு நேரமாகும்... இண்டைக்கு இரவே வந்தாலும் வரும்."

"வராது எண்டு நான் சொல்லேல்ல... கொஞ்சம் நிதானமா இருங்கோ... யோசிச்சுச் சில ஒழுங்குகளைச் செய்துகொண்டு அடுத்த கட்டத்தைப் பாப்பம்..."

"அடுத்த கட்டமெண்டா... என்னத்தைச் சொல்லுறாய்..."

"இந்த இடத்த விட்டுக் கொஞ்சம் தள்ளியெண்டாலும் இருக்கிறதச் சொல்லுறன்..."

"அப்ப இந்த வீட்டில் கிடக்கிற சாமான்களை என்ன தம்பி செய்யிற.."

கனடாவிலிருந்து சின்னண்ணா சம்பாதித்த காசில் கட்டிய மாளிகை மாதிரி வீடு... வீட்டை நிறைக்கும் நவீனமான பொருட்கள்... சீதனமாய்க் கொண்டு செல்லவென அக்காவின் ரசனைக்கு ஏற்ப தெரிவு செய்தவை. இவை ஒவ்வொன்றும்... இவற்றை இப்படியே அனாதைகளாக விட்டுப்பிரிய அக்காவின் மனசு சம்மதிக்காதுதான்.

"ஐயா! என்ர பிள்ளை கனடாவில் நொந்து சம்பாதிச்ச காசடா எல்லாம்..." அம்மா அரற்றினாள்.

நான் மௌனமாக எழுந்து உள்ளே போனேன்.

அப்பாவின் அறையில் பெரியசாமி, அப்பாவின் படுக்கை விரிப்பை மாற்றிக் கொண்டிருந்தார். சற்று முன்னர் எமது வீட்டிலிருந்து கிட்டத்தட்ட அரை மைல் தொலைவில் செல் விழுந்த பாதிப்பு எதையும் பெரியசாமியின்

முகத்தில் காணமுடியவில்லை. அருகிலிருந்த சக்கர நாற்காலியில் தூக்கி உட்கார வைக்கப்பட்டிருந்த அப்பா மட்டும் எதையோ சொல்ல எத்தனித்தார்.

''என்னப்பா...'' என்று கேட்டபடி அவரை அணுகினேன். பாரிசவாதத்தில் ஒரு பக்கம் இழுத்துப்போன வாயோடு அவர் சொன்னதை விளங்கிக் கொள்ள முனைந்தேன்.

''இ... இள்... ளையும்... ழெ... ல்வ... ழு... மா'' என்று சொற்கள் குழம்பி... அவரது தவிப்பை அந்த விழிகளும் கையொன்றும் வெளிப்படுத்தத் துடிக்கையில...

''இங்கையும் செல் வருமா எண்டு கேக்கிறார் தம்பி...''

பெரியசாமி அப்பாவைப் புரிந்துகொண்டு கூறினார். இந்த எட்டு வருடங்களில் அப்பாவை முழுதாய்ப் புரிந்து கொண்ட ஒரே ஒரு ஆத்மா பெரியசாமி தான். சம்பளத்துக்கு அமர்த்தப்பட்டிருந்த போதும் வெறும் கடன்கழிப்பாய் எண்ணாமல், ஒரு பொறுப்புள்ள தாதியாய், துணையாய் அவரது மலசலத் துணிகளையும் எந்தவித அசூயையும் காட்டாமல் துவைத்துப் போட்டு, ஒரு குழந்தை போல அப்பாவைப் பராமரிக்கும் மனிதர் இந்த பெரியசாமி. அம்மாவோ அக்காவோ அருகில் வரவே தயங்கியபோது, ஆளொரு கோலமும் துணியொரு கோலமுமாய் மலசலங் கழித்துக் கிடந்த அப்பாவை...

''ஒரு கைபிடி தம்பி...'' என்று என்னையும் அழைத்து, அவரைத் தூக்கிக் கழுவி அமர்த்தித் துணிகளைக்கழுவி அறையை நேர்த்தியாக மாற்றி, தனது படுக்கையையும் அருகில் இட்டுக்கொண்ட பெரியசாமி வெறுமனே ஒரு நோயாளியைப் பராமரிக்க நியமிக்கப்பட்ட ஓய்வு பெற்ற தாதியாக மாத்திரம் செயற்படவில்லை. மாந்தநேயத்தின் ஒரு தூதுவனாக விளங்கிய அந்த மனிதர் என் மனசில் ஒரு மேலான மாந்தனாக விசுவரூபம் கொண்டவர்.

''ஒண்டுக்கும் நீங்கள் யோசிக்க வேண்டாமப்பா. வலுகெதியா
ஏதும் ஒழுங்கு செய்வம்...''

அப்பாவைத் தேற்றும் விதமாய் அவரது கைபற்றி ஆறுதலாய்ச் சொல்லி விட்டு வெளியே வந்தேன்.

ஆளுக்கொரு மூலையாய் அமர்ந்து கொண்டு, அழுதபடியிருந்தனர் அம்மாவும் அக்காவும். இப்போதைக்கு மாற்றாகச் செல்லக்கூடிய

இடமென்றால்... அக்காவுக்குப் பேசி ஒழுங்கு செய்திருக்கும் மாப்பிள்ளை வீட்டாரின் வீடுதான். நல்லூர் இப்போதைய நிலைமைக்கு நல்ல பாதுகாப்பான இடந்தான். எங்கள் நெருங்கிய உறவினர் யாவருமே உரும்பிராயிலும் ஏழாலையிலும் என்று இருக்கும் போது, பாதுகாப்பான தொலைவு நல்லூர் என்றே எனக்குப்பட்டது.

எனது யோசனையை மெல்ல வெளியிட்டேன். அம்மா ஏதுமே கூறவில்லை. அக்காதான் துள்ளினாள்.

“கலியாணப்பேச்சுச் சரி வந்தாப்போல நாங்கள் அவையிட்ட இப்பிடிப் போகலாமோ... அது மரியாதையில்லை. நானெண்டா மாட்டன்”

அக்கா தனது வழமையான பிடிவாதத்தோடு.

“அப்ப வேற எங்க பிள்ள போறது...’ அம்மா கேட்டாள்.

“எங்கை யெண்டாலும் போவம்... அங்க வேண்டாம்.”

“அப்ப கோயில், பள்ளிக்கூடங்களில் வந்து இருப்பியளோ...’

“கோயில், பள்ளிக்கூடத்தில அகதியளோட நாங்களும் வந்து இருக்கவோ...”

அம்மாவின் பழைய பரம்பரைத் திமிர் பேசியது.

“கோயில் பள்ளிக்கூடங்களில் உங்களால வந்திருக்கேலாது எண்டால் உங்கட ஆக்களிட்ட உரும்பிராய்க்கோ அல்லது அப்பாட ஆக்களிட்ட ஏழாலைக்கோதான் போகவேணும். அந்த இடங்களில் செல்லடிப் பயத்தில சனமெல்லாம் எழும்பி வேற இடங்களுக்குப் போயிட்டுது. இப்ப உதவியெண்டு போகக்கூடிய இடம் நல்லூர் தான்.”

முடிவில் நான் நல்லூரில் அவர்களின் வீட்டைச் சென்றடைந்தபோது மாலை நாலு மணிக்கு மேலிருக்கும். நிலைமையை விளக்கி எப்படியும் அப்பாவுக்கு ஒரு தனியிடம் வேண்டுமென்பதையும் கூறியபோது, அந்த விடயம்தான் எல்லோருக்கும் சங்கடம் தந்தது போலப் பட்டது. எதற்கும் அன்றைய இரவே வருவதாகச் சொல்லிவிட்டு வீட்டுக்கு வந்தேன்.

“அப்பாவைக் கொண்டு போறது அவையளுக்கு விருப்பமில்லை எண்டு சொல்லுறாய் பிறகு என்னெண்டு கொண்டு போறது... அவையள்தான் என்னெண்டு அரியண்டங்களைத் தாங்குவினம்...” அக்கா பெரிதாய்ச் சத்தம் போட்டாள்.

"அங்கு போயிருந்து கொண்டு வேணுமெண்டால் ஒரு தனி வீடு பாப்பம்..."

"அப்ப இந்த வீடு" அக்கா பெரிய ஏக்கத்தோடு கேட்டாள். அம்மா பெரிதாய் மூச்செறிந்தாள். நான் வாகனமொன்று ஒழுங்கு செய்யப் புறப்பட்டேன்.

"தம்பி ஒருக்கா அப்பா வரட்டுமாம்"
பெரியசாமி புறப்படத் தயாரான என்னிடம் ஓடி வந்தார்.

"கூப்பிட்டனீங்களா அப்பா"
என்றபடி நான் அறைக்குள் நுழைந்தேன். பெருத்த தவிப்புடன் எதையோ சொல்ல முனைந்து, அதை மீறிப் பெருகிய கண்ணீருடன் வெதும்பும் அவரைக்காண இதயம் விண்ணென வலித்தது.

முதுமை கொடியது. செயலிழந்து சுமையாய் நோய்வாய்ப்பட்டு அடுத்தவரின் வெறுப்புக்கு ஆளாகி மனிதன் வெதும்பும் நிலைமை... ஓ... அது மிகத்துயரானது. என் முதுகைத் தட்டிப் பெரியசாமி தான் பேசினார்.

"நீங்கள் கதைச்சதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்தவர்.
தன்னால எல்லாருக்கும் ஒரே கரைச்சல் எண்டு இப்பதான்
என்னட்டையும் சொல்லி அழுதார்."

தலை கவிழ்ந்து அழும் எனது தந்தையைப் பார்த்து நிற்கும் மனத் திண்மையற்றவனாக நான் வெளியேறினேன். பெரியசாமியை மட்டும் அழைத்து, நான் மேற்கொள்ளப் போகின்ற நடவடிக்கைகளைப் பற்றி விளக்கிவிட்டு மீண்டும் சைக்கிளில் ஏறினேன். தொலைவில் மீண்டும் எங்கோ செல் விழுந்து அதிர்வு பரவிற்று.

வாகனத்தை ஒழுங்கு செய்து, வீட்டுக்கு வரச்சொல்லிவிட்டுத் திரும்பினேன். மிகவும் அவசியமான பொருட்களை மட்டும் தெரிவு செய்து பொதிகளாகக் கட்டிக் கொண்டு, அன்றைய இரவு உணவைப் பொதி கட்டிக் கொண்டிருந்த அம்மாவிடம் போனேன்.

"அவையள் ஒண்டும் பெரிய சந்தோசத்தோட எங்களை வரச் சொல்லயில்ல. பார்க்கப் போனால் நாங்கள் வீட்டை இப்படியே விட்டு வெளிக்கிடுவமெண்டு அவையள் எதிர்பார்க்கேல்ல. ஆனால் இதையெல்லாம் இப்ப பார்க்க முடியாது. ஏலுமெண்டால் ஒன்றிரண்டு கிழமைக்குள்ள தனி வீடாப்பாக்க முடிஞ்சாலும் நல்லது."

அம்மாவின் முகம் மேலும் விசனத்தால் கறுத்துப்போனது.

"உங்களை இண்டைக்கிரவு அங்க கொண்டுபோய்விட்டிட்டு ஏலுமெண்டால், நாளைக்கு ஒரு வாகனம் பிடிச்சு இந்தச் சாமான்களை ஏத்திக்கொண்டு வாறன்." நான் தொடர்ந்தேன்.

"எங்களை அங்க விட்டுப்போட்டு நீ தனிய இஞ்ச நிக்கவோ... நல்லகதை... உன்னை இந்த வீட்டில தனிய விடமாட்டன்."

அம்மாவின் குரல் தீர்மானமாய் மறுத்தது. அதே போதில்

"தம்பி... இஞ்ச ஒருக்கா வந்திட்டுப் போங்கோ."

பெரியசாமியின் குரல் பதட்டமாய் ஒலித்தது.

அப்பாவின் அறைக்குள் நுழைந்த என்னை அம்மா பின் தொடர்ந்தாள்.

பெரும் திணறலுடன் மூச்சுவிடப் பெரிதும் சிரமப்பட்டபடி படுக்கையிற் கிடந்து உழலுகின்ற அப்பாவைக் காண ஏதோ விபரீதம் நேரப்போவதாய் மனசு அடித்துக்கொண்டது. அம்மா பெரிதாய்க்குரல் எடுத்து அழத்தொடங்கினாள்.

"டொக்டரை ஒருக்காக் கூட்டிக்கொண்டு வாங்கோ தம்பி..."

பெரியசாமி கவலையிலும் நிதானம் தவறாமல் பேசினார்.

அவசரமாய்ச் சட்டையை மாட்டிக்கொண்டு சைக்கிளை எடுக்கையில்-

மிகப் பெரிய சத்தத்துடன் ஒரு செல்... காதே கிழிந்து விட்டது போல... பதட்டத்தில் எடுத்த சைக்கிளைக் கீழே போட்டுவிட்டு உள்ளே ஓடினேன்.

"ஐயோ தம்பி வெளியில ஓடு... எங்கையோ வலுகிட்டத்தான் விழுந்திருக்கு நிக்காமல் ஓடு. வெளி முற்றத்தில் விழுந்து படு."

அக்கா குளறியபடி அம்மாவையும் இழுத்துக் கொண்டு வெளியே ஓடி வந்து கொண்டிருந்தாள். அவர்களை லட்சியம் செய்யாமல் நான் அப்பாவின் அறைக்குள் ஓடினேன். அப்பாவின் நெஞ்சைத் தடவி விட்டுக்கொண்டு அமர்ந்திருந்தார் பெரியசாமி.

"கட்டிடத்துக்குள்ள இருக்கிறது புத்தியில்ல. பிடியுங்கோ அப்பாவை, வீல் செயரில் இருத்தி வெளியில கொண்டுபோவம்."

"வேண்டாம் தம்பி அவரை இப்ப சிரமப்படுத்த வேணாம். நீங்கள் வேணுமெண்டால் போங்கோ. அப்பவோட நான் இருக்கிறேன்."

பெரியசாமி உறுதியாக மறுத்தார்.

என்னையும் அறியாமல் நான் வெளியே வந்தேன். அடுத்தடுத்து எங்கேயென்று செல்லமுடியாதவாறு செல்கள் வீழ்ந்து வெடித்தன. எங்களின்

வீட்டைத்தாண்டியும் அதன் எதிர்ப்புறத்திலும் அவை வீழ்ந்து வெடித்தன. சிறிது நேர இடைவெளியில் மீண்டும் உள்ளே போனேன். அப்பாவின் கட்டிலருகேயிருந்த நாற்காலியில் பெரியசாமி அமைதியுடன் அமர்ந்திருந்தார். படுக்கையில் அப்பா அமைதியாய்க்கிடந்தார். திடுக்கிட்ட மனதோடு நான் பெரியசாமியை ஏறிட்டேன். கவலை தோய்ந்த ஒரு தலையசைப்புடன் பதிலளித்தார்.

"ஒருவரையும் கரைச்சல் படுத்த விரும்பாமல் பெரியய்யா போயிற்றார் தம்பி."

ந. சத்தியபாலன்
'வெளிச்சம்' 1995

## கீழ்வரும் வினாக்களுக்கு விடை தருக.

1. இக்கதை மாந்தர்கள் எச்சூழலில் வாழ்கின்றனர்?
2. வீடு யாருடைய பணத்தில் கட்டப்பட்டுள்ளது?
3. அம்மா கோயில், பள்ளிக்கூடத்தில் போய் இருக்க மறுத்த கரணியம் யாது?
4. வீட்டை விட்டுச் செல்வதென முடிவெடுக்கும்போது, அப்பாவுடனும் கலந்து பேசுகின்றனரா? அப்பாவின் மனநிலை எப்படி இருந்தது?
5. வீட்டை விட்டு வெளியேறி தங்களிடம் வரப் போவதாகக் கூறியதும் அக்காவின் மாப்பிள்ளை வீட்டார் எத்தகைய உணர்வைக் காட்டினர்?
6. எறிகணை விழும்போது அதிலிருந்து தப்புவதற்கு என்ன செய்கின்றனர்?
7. பெரியசாமி என்பவர் யார்? அவர் எப்படிப்பட்டவர்?
8. இக்கதையை வாசிக்கும்போது, உமக்கு ஏற்பட்ட உணர்வுநிலை என்ன?

# மொழிவளம்

## பழமொழிகள்

1. அரசன் எவ்வழி குடிகள் அவ்வழி.
   முன்மாதிரி
2. இரக்கப் போனாலும் சிறக்கப்போ.
   வறுமையிற் செம்மை
3. உண்மை சொல்லிக் கெட்டவரில்லை-
   உண்மையின் உயர்வு
4. ஒரு காசு பேணின் இருகாசு தேறும்.
   தேட்டம் பெருகும்
5. குற்றம் பார்க்கிற் சுற்றமில்லை.
   உறவினர் குறை பாராட்டலாகாது
6. கையில் வெண்ணெயிருக்க நெய்க்கலையாதே.
   தன்னிடம் இருப்பதைத் தானறியாமை
7. சித்திரமும் கைப்பழக்கம் செந்தமிழும் நாப்பழக்கம்.
   தொடர்பயிற்சி திறனை வளர்க்கும்
8. சிறு துரும்பும் பல்லுக்குத்த உதவும்.
   சிறிதென்று எதனையும் இகழக்கூடாது
9. தாயும் பிள்ளையுமானாலும் வாயும் வயிறும் வேறு.
   உறவு வேறு தேவை வேறு
10. துள்ளின மாடு பொதி சுமக்கும்.
    அடக்கம் இன்மை துன்பம் தரும்
11. தூரத்துத் தண்ணீர் ஆபத்துக்குதவாது.
    கைக்கெட்டாதது பயனற்றது
12. நிழலின் அருமை வெயிலிற் தெரியும்.
    ஒன்று இல்லாதபோதுதான் அதன் அருமை தெரியும்
13. பாடின்றிப் பட்டமில்லை.
    முயற்சியின்றி உயர்ச்சி இல்லை.
14. வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம்.
    திறமையின் ஆற்றல்

## பயிற்சி

1. பொருத்தமான சொற்கள், சொற்றொடர்களை வைத்துப் பழமொழிகளைப் பூர்த்தி செய்க.

   கற்றது கைம்மண்ணளவு, உயரஉயரப் பறந்தாலும்,
   அச்சாணி இல்லாத தேர், கடுகு சிறிதானாலும், எட்டாப் பழத்திற்கு

2. பொருத்தமான விடையைத் தெரிந்து குறிப்பிடுக.

   1. 'நிழலின் அருமை வெயிலில் தெரியும்' என்னும் பழமொழி குறிக்கும் பொருள்?
      அ. நிழல் இல்லாத போதுதான் அதன் அருமை தெரியும்.
      ஆ. நிழலும் வெயிலும் அருமையானவை.
      இ. ஒன்று இல்லாத போதுதான் அதன் அருமை தெரியும்.
      ஈ. துன்பம் கொடுமையானது, இன்பம் மகிழ்வானது.

   2. 'உண்ணாச் சொத்து மண்ணாய்ப் போய்விடும்' என்ற பழமொழி குறிக்கும் பொருள்
      அ. சொத்துகளை உண்ணாவிட்டால் அது மண்ணுக்குள் புதையுண்டுவிடும்.
      ஆ. உண்ணாத சொத்துகள் மண்ணாக மாறிவிடும்.?
      இ. பயன்படுத்தாத செல்வம் வீணாகிப் போய்விடும்.?
      ஈ. தேட்டம் சிறந்தது.

   3. 'பாடின்றிப் பட்டம் இல்லை' என்ற பழமொழி குறிக்கும் பொருள்.
      அ. கடின உழைப்பில்லாவிட்டால் பயன்பெற முடியாது.
      ஆ. பட்டம் இல்லையென்றால் பயன் இல்லை.
      இ. பாட்டுப் பாடினால் பட்டம் பெறலாம்.
      ஈ. பட்டம்பெற எளிதான பாடங்களைப் படிக்க வேண்டும்.

   4. 'சித்திரமும் கைப்பழக்கம் செந்தமிழும் நாப்பழக்கம்' என்ற பழமொழியின் பொருள்
      அ. பயிற்சியின் மூலம் நல்ல பயனைப் பெற முடியும்.
      ஆ. சித்திரமும் செந்தமிழும் முறையே கையாலும் நாவாலும் வளர்க்கப்படுவன.
      இ. சித்திரமும் செந்தமிழும் பழக்கத்தால் மட்டும் வளரும்.
      ஈ. பயிற்சியில்லாக் கல்வி பயனில்லாக் கல்வி.

5. 'துள்ளின மாடு பொதி சுமக்கும்' என்னும் பழமொழி குறிக்கும் பொருள்.

அ. துள்ளித் திரிகிற மாட்டைத்தான் அடக்கி வைப்பர்.

ஆ. மாட்டின் தொழில் பொதி சுமத்தல்.

இ. அடக்கமாக இருத்தல் மாட்டுக்கு அழகு.

ஈ. அடங்காமல் இருந்தால் இடர்ப்பட வேண்டி வரும்.

# இலக்கணம்

## சொற்புணர்ச்சி

நிலைமொழி ஈறும் வருமொழி முதலும், பொருள் பொருத்தமுறச் சேர்வது சொற்புணர்ச்சி என ஏற்கெனவே நீங்கள் அறிந்துள்ளீர்கள். இங்கே தொகுதி ஒன்றில் உள்ள சொற்கள் எதுவித மாற்றமுமின்றி இயல்பாக இணைந்துள்ளன. இவ்வகைப் புணர்ச்சி இயல்புப் புணர்ச்சி எனப்படும்.

1. வேலை + வாய்ப்பு = வேலைவாய்ப்பு
   மண் + வெட்டி = மண்வெட்டி

நிலைமொழி ஈற்றில் மெய்யும் வருமொழி முதலில் உயிரும் வரின், மெய்யுடன் உயிர் புணர்தல் இயல்பாதலால் இதுவும் இயல்புப் புணர்ச்சியே.

கடல் + அலை = கடலலை
வான் + ஒலி = வானொலி

2. பூ + துகில் = பூந்துகில்
   நெல் + கதிர் = நெற்கதிர்
   மணம் + மாலை = மணமாலை

தொகுதி இரண்டிலுள்ள சொற்கள் இயல்பாக அன்றி மாற்றங்களுக்குள்ளாகி இணைந்துள்ளன. இத்தகைய புணர்ச்சிகளே மாறுபடு புணர்ச்சி எனப்படும்.

## மாறுபடுபுணர்ச்சி (விகாரப்புணர்ச்சி) மூன்று வகைப்படும்.

தோன்றல்
திரிதல்
கெடுதல்

### தோன்றல்

நிலைமொழியையும் வருமொழியையும் இணைப்பதற்காகச் சில எழுத்துகள் தோன்றும். இது தோன்றல் எனப்படும்.

எ-கா: விலை + பட்டியல் = விலைப்பட்டியல்
கல்வி + திணைக்களம் = கல்வித் திணைக்களம்

### திரிதல்

சொற்கள் சேரும்போது நிலைமொழி ஈற்றெழுத்தோ வருமொழி முதலெழுத்தோ வேறோர் எழுத்தாகத் மாறிவருதல் திரிதல் எனப்படும்.

எ-கா: தோல் + செருப்பு = தோற்செருப்பு
கண் + நீர் = கண்ணீர்

### கெடுதல்

நிலைமொழியும் வருமொழியும் சேரும்போது, நிலைமொழி ஈற்றெழுத்து அற்றுப் போதல் கெடுதல் எனப்படும்.

எ-கா: நீலம் + வானம் = நீலவானம்
பவளம் + வாய் = பவளவாய்

## பயிற்சி

பின்வரும் செய்யுளின் சொற்புணர்ச்சியைப் பிரித்தெழுதுக.

எ-கா :

செய்கின்றதெல்லாந் தெரிந்துணர்ந்து வாவென்றாள்.
செய்கின்றது + எல்லாம் + தெரிந்து + உணர்ந்து,
வா + என்றாள்

உலக வாழ்க்கையின் நுட்பங்கள் தேரவும்
ஓது பற்பல நூல்வகை கற்கவும்
இலகு சீருடை நாற்றிசை நாடுகள்
யாவுஞ் சென்று புதுமை கொணர்ந்திங்கே
திலக வாணுத லார்தங்கள் பாரத
தேசமோங்க உழைத்திடல் வேண்டுமாம்
விலகி வீட்டிலோர் பொந்தில் வளர்வதை
வீரப்பெண்கள் விரைவி லொழிப்பராம்.

பாடம் 10

# பல்சுவைப்பாடல்கள்

## கனிவு

மழலைச் செல்வங்கள் தருகின்ற இன்பத்திற்கு நிகரானது எதுவும் இந்த மண்ணிற் கிடையாது. கண்டார்க்கும் கேட்டார்க்கும் இன்பம் தரும் மழலை, தன் தாய்க்கு ஆருயிராய் விளங்குமன்றோ! ஒரு தாய் தன் துயரங்களை மறப்பதும் தன்னைத்தானே பெரும்பேறு பெற்றவளாக எண்ணுவதும் தான் ஈன்றெடுத்த மகவினாலன்றோ! அந்தத் தாய்க்குத் தன்சேய் மீது தோன்றும் அன்பைப் போன்ற இனிமை நிறைந்த கனிவு வேறெதிலும் கிடையாது.

ஆராரோ ஆராரோ ஆரிவரோ!
ஆராரோ ஆராரோ ஆரிவரோ!
மழைகூட ஒருநாளில் தேனாகலாம்
மணல்கூடச் சிலநாளில் பொன்னாகலாம்
ஆனாலும் அவையாவும் நீயாகுமா?
அம்மாவென் றழைக்கின்ற சேயாகுமா?

ஆராரோ ஆராரோ ஆரிவரோ!
ஆராரோ ஆராரோ ஆரிவரோ!

விண்மீனும் கண்ணே உன் கண்ணாகுமா?
விளையாடும் கிளிஉன்றன் மொழிபேசுமா?
கண்ணாடி உனைப்போலக் கதை கூறுமா? - இரு
கைவீசி உலகாளும் மகனாகுமா?
ஆனாலும் அவையாவும் நீயாகுமா?
அம்மாவென் றழைக்கின்ற சேயாகுமா?

ஆராரோ ஆராரோ ஆரிவரோ1
ஆராரோ ஆராரோ ஆரிவரோ1

- கவிஞர் கண்ணதாசன்

## நிமிர்வு

உள்ளம் நிறைந்து பொங்கும் தமிழுணர்வோடு பாவேந்தர் வானத்தைப் பார்க்கிறார். அது தென்திசை வானம். அந்த அடிவானத்திற்கு அப்பால் தானே இலங்கை இருக்கிறது. அங்கு தானே என் மூதாதை - உலகு போற்றிய பண்பும் வீரமும் கல்வியும் மிக்க என் தலைவன் இராவணன் வாழ்ந்தான். பைந்தமிழின் பகைகண்டால் வெந்தழலாய் மாறுகிறவன் இராவணேசன். பாவேந்தர் சுப்புரத்தினத்தின்உள்ளத்திலே பெருமிதம் எழுந்தது; தலை நிமிர்ந்தது.

தென்திசையைப் பார்க்கின்றேன் என்சொல்வேன் எந்தன்
சிந்தையெலாம் தோள்களெலாம் பூரிக்குதடா!
அன்றந்த இலங்கையினை ஆண்ட மறத்தமிழன்
ஐயிரண்டு திசைமுகத்தும் தன் புகழை வைத்தோன்
குன்றெடுத்த பெருந்தோளான் கொடைகொடுக்கும் வள்ளல்
குள்ளநரிச் செயல் செய்யும் கூட்டத்தின் கூற்றம்
என் தமிழர் மூதாதை! என் தமிழர் பெருமான்!
இராவணன் காண்!

பாவேந்தர் கனக. சுப்புரத்தினம்

## கழிவிரக்கம்

இறப்பர்த் தோட்டத்திலே துரைமாரைவிட கண்காணிமாரின் கொடுமைதான் தாண்டவமாடியது. தொழிலாளி ஓயாது உழைத்தாலும், ஓடாய்த் தேய்ந்தாலும், கவலையின்றிக் கண்காணி அவர்களை வாட்டுவான். அவனது தொல்லை தாளாமல் ஒரு தொழிலாளி தன்னுள் தானே இரங்குகிறான்.

ஊரான ஊரிழந்தேன்
ஒத்தப் பனைத்தோப்பிழந்தேன்
பேரான கண்டியிலே
பெத்த தாயை நாமறந்தேன்

பாதையிலே வீடிருக்க
பழனிச் சம்பா சோறிருக்க
எருமேத் தயிரிருக்க
ஏன்டி வந்தோம் கண்டிச்சீமை

எண்ணிக் குழிவெட்டி
இடுப்பொடிஞ்சி நிக்கயிலே
வெட்டு வெட்டு எங்கிறானே
வேலையத்த கங்காணி

தோட்டம் பிரளியில்லே
தொரெ மேலே குத்தமில்லே
கங்காணி மாராலே
கனபிரளி யாகுதையா

அட்டைக் கடியும்
அரிய வழிநடையும்
கட்டை இடறுதலும்
காணலாம் கண்டியிலே

ரப்பரு மரமானேன்
நாலுபக்க வாதுமானேன்
இங்கிலிசு காரனுக்கு
ஏறிப்போக காருமானேன்.

- நாட்டுப் பாடல்

## கீழ்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.

1. குழந்தைகளுக்கு ஈடாகாதவைகள் எனக் கவிஞர் எவற்றைக் குறிப்பிடுகிறார்?
2. ஒரு குழந்தை எவ்வாறு உலகை ஆள்கிறதாகக் கவிஞர் கூறுகிறார்?
3. 'நிமிர்வு' என்கின்ற பாவில் கவிஞர் எதனால் தலை நிமிர்கிறார்?
4. 'பாரதிதாசன்' என்னும் பட்டப்பெயர் உடையவரது இயற்பெயர் என்ன?
5. கண்டிக்கு வந்த தொழிலாளர் துயர், நாட்டுப்பாடலில் எவ்வாறு எடுத்துக்காட்டப்பட்டுள்ளது?
6. கண்டிக் கங்காணி எப்படிப்பட்டவர்?
7. 'ஏறிப் போக காருமானேன்'. இந்த வரியை நீர் எவ்வாறு விளங்கிக்கொள்கிறீர்?
8. மேலே உள்ள பாடல்களிலே உமக்குப் பிடித்த பாடல் எது? ஏன்?

## சொற்பொருள்

| | | |
|---|---|---|
| மகவு | - | பிள்ளை |
| ஐயிரண்டு திசைமுகம் | - | எண்திசையும் மேலும் கீழும் |
| கூற்றம் | - | கூற்றுவன் உயிரினங்களின் உயிரை எடுப்பவன் |
| கழிவிரக்கம் | - | பேரிரக்கம் |
| பிரளி | - | பேச்சு மாறுதல் |
| வாது (சிங்களம்) | - | கொப்பு (கிளை) |

# இலக்கணம்

## ஏவல்வினை

1. பாதையின் வலப்பக்கமாக நட!
2. மாமா வீட்டுக்குச் செல்லப் புறப்படு!
3. பாடத்தை நன்கு வாசியுங்கள்!
4. இந்த ஆய்வைச் செய்யுங்கள்!

மேலேயுள்ளவை ஏவற்சொல்லியங்கள். அவை ஏவுதற் பொருளில் வந்துள்ளன. முன்னிலைக்குரியன.

அவற்றில் முதலிரு சொல்லியங்களும் முன்னிலை ஒருமையைக் குறித்து நிற்கின்றன. எனவே, அவற்றிலுள்ள வினைகள் முன்னிலை ஒருமை ஏவல்வினைகள் எனப்படும்.

மூன்றாம் நான்காம் சொல்லியங்கள் முன்னிலைப் பன்மையைக் குறிக்கின்றன. எனவே, அவற்றிலுள்ள வினைகள் முன்னிலைப் பன்மை ஏவல்வினைகள் எனப்படும்.

முன்னிலைப் பன்மை ஏவல்வினையை, முன்னிலை ஒருமை வினையாகப் பயன்படுத்துகிற பொழுது, அது உயர்வு நோக்கிய ஒருமையாக அமையும்.

எ-கா : முதலாளி புறப்படுங்கள்!

புறப்படுங்கள் என்ற வினையடியே ஏவுதற் பொருளில் வந்து ஏவல் வினையாக நிற்கிறது.

### ஏவல் எதிர்மறை வினை

எ-கா : நீ கற்கும்போது கவனமின்றி இருக்காதே!
கட்டுரை எழுதும்போது எழுத்துப்பிழை விட்டு எழுதாதீர்கள்!

இச்சொல்லியங்களில் வருகின்ற இருக்காதே, எழுதாதீர்கள் ஆகிய வினைகள் எதிர்மறை வினைகளாக உள்ளன. எனவே, அவை முன்னிலை ஏவல் எதிர்மறை வினைகள் எனப்படும். இவ்வினைகள் இருக்கவேண்டாம், எழுதவேண்டாம் என தற்காலத்தில் பயன்படுத்தப்படுகின்றன.

## வியங்கோள் வினை

1. வாரி வாரி வழங்கும் கொடைவள்ளல்கள் வாழ்க!
2. கொடுங்கோல் அரசு ஒழிக!
3. நீங்கள் எப்பொழுதும் நல்லதையே எண்ணுக!
4. அன்பனே என் நிலை அறிந்து உதவி செய்க!

இச்சொல்லியங்களில் வரும் வாழ்க, ஒழிக, எண்ணுக, செய்க ஆகிய வினைகள் வியங்கோள் வினைகளாகும். அவை வாழ்த்துதல், வைதல், விதித்தல், வேண்டல் என்னும் பொருள்களில் வந்துள்ளன.

வியங்கோள் வினைகள் மூவிடத்திற்கும், ஐம்பாலுக்கும் பொதுவாக வருவன. ஒருமை பன்மை பாகுபாடற்றவை.

எ-கா : நான் வாழ்க!
நீ வாழ்க!
நீர் வாழ்க!
நீவிர் வாழ்க!
அவன் வாழ்க!
அவர்கள் வாழ்க!
அது வாழ்க!
அவை வாழ்க!

# மொழி வளம்

## உவமைத்தொடர்

உவமையணி பற்றி முன்பு கற்றிருக்கின்றீர்கள். உவமையணியில் உவமானம், உவமேயம் என்னும் இரு பகுதிகள் உண்டு. உவமானம் தனிச்சொல்லாகவோ நீண்ட தொடராகவோ அமையலாம்.

## பயிற்சி

1. இப்பகுதியில் உவமானமாக மட்டும் அமைந்துள்ள தொடர்கள் சில, உவமைத்தொடர்கள் எனத் தரப்படுகின்றன. அவற்றைப் பொருத்தமான உவமேயத்துடன் இணைத்துச் சொல்லியங்கள் எழுதிப் பயில்க.

1. உயிரும் உடலும் போல (பிரியா நட்பு)
2. எடுப்பார் கைப்பிள்ளை போல (தன் ஆற்றலற்ற தன்மை)
3. ஒரு தாய் வயிற்றுப் பிள்ளைகள் போல (ஒற்றுமை)
4. ஓருயிரும் ஈருடலும் போல (இருவரின் ஒருமைத் தன்மை)
5. கிணறுவெட்டப் பூதம் புறப்பட்டதுபோல(நன்று நினைக்கத் தீங்கு விளைதல்)
6. கீரியும் பாம்பும் போல (தீராப் பகை)
7. சிலையில் எழுத்துப் போல (நிலைத்து நிற்றல்)
8. சுழற் காற்றில் அகப்பட்ட துரும்புபோல (ஓயாத அலைச்சல்)
9. செவிடன் காதில் சங்கு ஊதியது போல (பயனின்மை)
10. தாரகை நடுவே தண்மதி போல (தலைமைச் சிறப்பு)

2. பகுதி **அ** விலுள்ள உவமைத்தொடருக்குரிய சமமான பொருள் தரும் உவமைத் தொடரை பகுதி **ஆ** விலிருந்து தெரிவு செய்து எழுதுக.

| அ. | ஆ. |
|---|---|
| 1. நகமும் சதையும் போல | நீர் மேல் எழுத்துப்போல |
| 2. செவிடன் காதில் சங்கு ஊதியது போல | பூனையும் எலியும்போல |
| 3. நீர் மேல் குமிழி போல | பூவும் மணமும் போல |
| 4. கீரியும் பாம்பும் போல | புறக்குடத்துள் வார்த்த நீர் போல |

## பாடம் 11 இலங்கைத்தீவில் தமிழர் ஆட்சியும் மாட்சியும்

(கி.பி. 8 - 12ம் நூற்றாண்டு வரை)

கி.பி. ஏழாம் நூற்றாண்டு முழுவதிலும் அநுராதபுரத்தில் சிங்கள மன்னர்கள் இலங்கைத் தமிழரதும் தமிழகத் தமிழரதும் துணையுடனேயே ஆட்சிசெய்தனர். எட்டாம், ஒன்பதாம் நூற்றாண்டுகளிலும் இந்நிலையே தொடர்ந்தும் நீடித்தது. இக்காலப் பகுதியில் தமிழகத்திலும் இலங்கையிலும் சைவநெறி தழைத்தோங்கியது. மன்னாரில் திருக்கேதீச்சுரமும் திருகோணமலையில் திருக்கோணேச்சுரமும் சிறந்தோங்கி இருந்தமையை நாயன்மார்களின் தேவாரங்களினால் அறியமுடிகிறது.

கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் முதலாம்சேனனின் ஆட்சியின்போது சிறீமாறவல்லப பாண்டியன், இலங்கைத் தமிழர்களது துணையுடன் அனுராதபுரத்தின் மீது படையெடுத்தான். போரிலே சேனனின் மக்களில் ஒருவனாகிய இளவரசன் மகிந்தன் கொல்லப்பட இளவரசன் காசியப்பன் பின்வாங்கினான். ஆனால், பாண்டியன் அநுராதபுரத்திலிருந்து உருகுணைவரை தொடரந்து துரத்தவே சேனன் மலையகத்துள் புகுந்தான். அங்கும் பாண்டியன் தொடரவே சேனன் அமைதிப் பொருத்தனை (சமாதான ஒப்பந்தத்தினை) செய்துகொண்டு ஆட்சியை மீண்டும் பெற்றான். மாணிக்கவாசகரால் சைவநெறிக்கு மாற்றப்பட்ட சிங்கள மன்னன் இவனேயென்று 'நிகாயசங்கிராஃகவ' என்ற சிங்களநூல் கூறுகிறது.

பத்தாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் சோழருக்கும் பாண்டியருக்கும் ஏற்பட்ட போரின்போது ஐந்தாம் காசியப்பன் பாண்டியருக்குப் படையுதவி அனுப்பினான். இருபடைகளையும் வெள்ளூரில் நிகழ்ந்த போரில் பராந்தகசோழன் அழித்தான். எஞ்சிய சிங்களப்படை தலைவனின்றி நாடு திரும்பியது. பாண்டியன் இராசசிம்மன் மதுரையையும் இழந்து பொலநறுவை மன்னன் நான்காம் தப்புலனிடம் அடைக்கலம் புகுந்தான். சோழனுக்கு அஞ்சிய தப்புலன் பாண்டியன் இராசசிம்மனுக்குப் புகலிடம் வழங்க மறுத்தான். ஆனால், அரசமுடியையும் செல்வங்களையும் அணிகலன்களையும் காத்துப்பேண ஒப்புக்கொண்டான். இராசசிம்மன் புகலிடம் கிடைக்காததால் சேரநாட்டிற்குத் திரும்பிச் சென்றான்.

உதயன் என்பவன் ஆட்சியிலிருந்தபோது பராந்தகசோழன் பாண்டியனது செல்வங்களை ஒப்படைக்கும்படி கேட்டான். உதயன் மறுக்கவே சோழர் இலங்கைமீது படையெடுத்தனர். இதனால் உதயன் பாண்டியனின் செல்வங்களுடன் உருகுணைக்கு ஓடினான். சோழர்களுக்குத் தமிழகத்தில் வேறு அரசியற் சிக்கல்கள் ஏற்படவே போரைநிறுத்திச் சோழர்படை நாடு திரும்பியது. மீண்டும் நான்காம் மகிந்தனது காலத்தில் இலங்கைமீது படையெடுத்தது. இவ்விதம் பல நூற்றாண்டு காலமாகத் தலைநகராக விளங்கிய அநுராதபுரத்தில் தமிழர் தொகை பெருகியது.

சிங்கள மன்னர்கள் வலுவற்று இருந்தபோதிலும் பாண்டியருக்கு அடிக்கடி படையுதவி புரிந்தனர். அதனாலும் சோழரால் வெற்றிகொள்ளப்பட்ட பாண்டியரது முடியைக் காத்து வந்ததாலும் சிங்களவரது வெளிநாட்டுக் கொள்கையாலும் சோழருக்கு இலங்கைமீது படையெடுக்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. பத்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இராசராசன் படையெடுத்து உருகுணை, மலையகம் தவிர்ந்த இலங்கையின் ஏனைய பகுதிகளைக் கைப்பற்றினான். இலங்கையைச் சோழநாட்டின் ஒரு மாநிலமாக்கினான். அதனால், இலங்கை 'மும்முடிச்சோழ மண்டலம்' என அழைக்கப்பட்டது. பொலநறுவையின் பெயரை 'சனநாதமங்களம்' என மாற்றி இலங்கையின் தலைநகர் ஆக்கினான்.

கி.பி.1017ல் பாண்டியரது முடியையும் அணிகலன்களையும் கைப்பற்றுவதற்காக இராசேந்திரசோழன் படையெடுத்து, பாண்டியனது செல்வங்களையும் முழுநாட்டையும் கைப்பற்றி ஐந்தாம் மகிந்த மன்னனையும் சிறைப்பிடித்தான். இராசேந்திரசோழன் தானொரு சைவனாக இருந்தும் பௌத்த சமயத்தையும் ஆதரித்தான். நாகபட்டினத்திலே சூடாமணி விகாரையை அமைப்பித்தான். காஞ்சியிலிருந்த பௌத்தப் பெரும்பள்ளியைப் புனரமைத்துக் கொடுத்தான். திருகோணமலையில் இருந்த வெல்கம் விகாரையைத் திருத்தியமைத்து 'இராசராசப்பெரும்பள்ளி' எனப்பெயர் சூட்டினான். ஆனால், சிங்கள வரலாற்றேடுகள் சோழர்களைப் பௌத்த எதிரிகளாகவும், அவர்களால் பௌத்த விகாரைகள் இடிக்கப்பட்டதாகவும் பொய்யுரை பகன்றுள்ளன.

இலங்கையின் கடைசிச் சோழமன்னன் குலோத்துங்கனும் பௌத்த விகாரைகளுக்குப் பேருதவி புரிந்ததாகக் கல்வெட்டுகள் கூறுகின்றன.

ஆனால், சிங்கள வரலாற்று ஏடுகள் அதை மறைத்து இனப்பகையை வளர்ப்பதற்காகத் திரித்து எழுதியுள்ளன. கி.பி. 992 தொடக்கம் முதலாம் இராசராசசோழன் முதல், முதலாம் குலோத்துங்கன் ஈறாக ஏழு சோழமன்னர்கள் 82 ஆண்டுகள் இலங்கையை ஆண்டனர். அதன்பின், முதலாம் விசயபாகு அநுராதபுரத்தையும் பொலநறுவையையும் கைப்பற்றினான். அவ்வாறிருந்தும் தமிழரின் கிளர்ச்சிகளை அடக்கி முடிசூடிக்கொள்ள மூன்றாண்டுகள் சென்றன. ஆட்சியமைத்தபின் தமிழர்களைத் தன்னுடன் சேர்த்துக் கொண்டு புத்தரின் பல்லைப் பாதுகாக்கும் பொறுப்பை ஒப்படைத்தான்.

முதலாம் விசயபாகுவின் காலத்தின் பின் இலங்கை அரச குடும்பத்தினரிடையே பிணக்குகள் ஏற்பட்டு, தென்னிலங்கை நான்காகப் பிரிக்கப்பட்டு ஆட்சிகள் பங்கிடப்பட்டன. ஒரு பிரிவு முதலாம் பராக்கிரமபாகுவுக்கு வழங்கப்பட்டது. இவனது தந்தை மானாபரணன் பாண்டிய குலத்தவனாவான். இவன் 'இரக்கன்' என்ற தமிழனின் உதவியுடன் உருகுணையையும் பிறபகுதிகளையும் கைப்பற்றினான். இவனே பர்மாவரை படையெடுத்துச் சென்ற சிங்கள மன்னன். இவன் ஏரி குளங்களைக் கட்டி, நாட்டை வளம்பெறச் செய்தான். தமிழ்க் குருதித் தொடர்புடையவனாக இருந்தாலும், சிங்களவரின் பெருந்தலைவனாக சூளவம்சத்தின் பாட்டுடைத் தலைவனாகப் போற்றப்படுகிறான். இலங்கை முழுவதையும் கட்டியாண்ட கடைசிச் சிங்கள மன்னன் பராக்கிரமபாகுவுக்குப் பின் இலங்கையில் நிலையற்ற ஆட்சியே நிலவியது. தமிழ் சிங்கள மன்னர்கள் மாறிமாறி ஆட்சி புரிந்தனர். நீண்ட இடைவெளிக்குப்பின் வடபகுதியிலே தனியான தமிழரசு நிலவியது. வன்னிக் குறுநில அரசுகள் யாழ்ப்பாண அரசின் மேலாளுமையை ஏற்றிருந்தன. மலையகத்தில் கண்டித் தனியரசு நிலவியது. தமிழருக்கு அஞ்சியஞ்சித் தெற்கு நோக்கி நகர்ந்து சென்ற சிங்களவர் தோற்றுவித்த கரையோரச் சிங்கள அரசும் தனி அரசாக ஆட்சி செய்தது. ஐரோப்பியர் வரும்வரை இந்நிலையே இலங்கைத்தீவில் நீடித்தது.

## அருங்குறிப்பு

- சிங்களவரது வெளிநாட்டுக் கொள்கைகள் கரணியமாக தமிழகத்து மன்னர்கள், இலங்கை மீது படையெடுக்க வேண்டிய நெருக்கடி ஏற்பட்டது.
- இவ்வரலாற்றுக் காலப்பகுதியில் தமிழர்களுடைய துணையின்றிச் சிங்கள அரசர்களால் ஆட்சி நடத்தமுடியாமல் இருந்தது.
- சோழர் படையெடுப்புக்களை நடத்திய போதும் பௌத்த விகாரைகளைப் பேணினர். பௌத்தநெறி அடையாளங்களைத் தமிழர் பேணிக்காத்து வந்துள்ளனர்.
- இலங்கை சோழ மண்டலத்தின் ஒரு மாநிலமாக்கப்பட்டு 'மும்முடிச்சோழமண்டலம்' என அழைக்கப்பட்டது.
- சூளவம்சத்தின் பாட்டுடைத் தலைவனாகச் சிங்களவர் போற்றும் முதலாம் பராக்கிரமபாகு பாண்டியர் மரபில் பிறந்தவனாவான்.
- இவ்வரலாற்றுக் காலமான (500) ஐந்நூறு ஆண்டுகளில் பெரும்பாலும் பாண்டிய, சோழ மன்னர்களின் மேலாளுகையின் கீழேயே இலங்கைத்தீவு இருந்தது.

## கீழ் வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.

1. 7ம் 8ம் 9ம் நூற்றாண்டுகளில் இலங்கையில் சைவநெறி தழைத்தோங்கியதை எவ்வாறு அறியமுடிகிறது?
2. கி.பி.எண்ணூற்று நாற்பத்தாறில் முதலாம் சேனனின் ஆட்சிக்காலத்தில் இலங்கைமீது படையெடுத்த பாண்டிய மன்னன் யார்? அவனால் கொல்லப்பட்ட சிங்கள இளவரசன் யார்?
3. வெள்ளூர்ப் போரிலே பராந்தகசோழனாலே தோற்கடிக்கப்பட்ட பாண்டிய மன்னன் யார்? அவனுக்குப் படையுதவி கொடுத்த சிங்கள மன்னன் யார்?

4. சோழமன்னர்கள் இலங்கை மீது படையெடுத்ததற்கான கரணியங்கள் எவை ?
5. இலங்கை முழவதையும் தன்னாட்சிக்குள் உட்படுத்தி, பாண்டியனது முடியையும் மீட்ட சோழமன்னன் யார்?
6. இராசேந்திரசோழன் அமைத்த, மீளமைத்த விகாரைகள் யாவை?
7. முதலாம் பராக்கிரமபாகுவுக்கும் பாண்டியருக்கும் உள்ள உறவுமுறை பற்றி விளக்குக.
8. ஐரோப்பியர் இலங்கைத் தீவிற்கு வரும்போது அங்கு நிலவிய ஆட்சிகள் எவை?

## மொழி வளம்

### உருவக அணி

ஒன்றை இன்னொன்றுடன் ஒப்பிட்டுக்காட்டுவது உவமை அணி. ஒரு பொருளை இன்னொன்றாக உருவகித்துக் கூறுவது உருவக அணி. ‘அது போன்றது இது’ என்பது உவமை. ‘அதுவே இது’ என்பது உருவகம். உவமை அணியிலிருந்து பிறந்ததே உருவகஅணி.

கல்நெஞ்சம் = கல் போன்ற நெஞ்சம் - உவமை அணி
நெஞ்சக்கல் = நெஞ்சம் ஆகிய கல் - உருவக அணி

உவமையணியில் நெஞ்சிற்கு உவமை கல். உருவக அணியில் நெஞ்சு கல்லாகவே உருவகிக்கப்பட்டுள்ளது.

## பயிற்சி

1. கீழே சில உருவகஅணிகள் தரப்பட்டுள்ளன. அவற்றை வைத்து சொல்லியங்கள் அமைக்குக.

| | | |
|---|---|---|
| கண்ணீர் முத்து | அறிவுக் கடல் | தமிழ்த்தேன் |
| கைம்மலர் | கண்ணம்பு | சொல்லம்பு |
| முகமதி | புருவவில் | கல்விக்கடல் |

## இலக்கணம்

# மூவிட வினைமுற்றுகள்

### தன்மை வினைமுற்று

நான் படகில் சென்றேன்.
நாம் ஊஞ்சல் ஆடினோம்.
நாங்கள் நாடகம் நடிப்போம்.

மேலே உள்ள சொல்லியங்களில் எழுவாயாக வந்துள்ள நான், நாம், நாங்கள் என்பனவற்றுடன் இயைபுபட முறையே சென்றேன், ஆடினோம், நடிப்போம் ஆகிய தன்மை வினைமுற்றுகள் பயனிலையாக இடம் பெற்றுள்ளன. சென்றேன் என்பது தன்மை ஒருமை வினைமுற்று. ஆடினோம், நடிப்போம் என்பன தன்மைப் பன்மை வினைமுற்றுகள்.

### முன்னிலை வினைமுற்று

கலைவிழாவில் நீ அழகாக நடனமாடினாய்.
நேற்றைய கூட்டத்தில் நீர் சிறப்பாகப் பேசினீர்.
நீங்கள் எல்லேரும் திறமையாகப் பேசுகின்றீர்கள்.

இவற்றிலுள்ள நீ, நீர், நீங்கள் என்பன முன்னிலைப் பெயர்கள். இம்முன்னிலைப் பெயர்களுக்கேற்ப முறையே, நடனமாடினாய், பேசினீர், பேசுகின்றீர்கள் ஆகிய வினைமுற்றுகள் பயனிலையாக இடம்பெற்றுள்ளன. நடனமாடினாய், பேசினீர் என்பன முன்னிலை ஒருமை வினைமுற்றுகள். பேசுகின்றீர்கள் என்பது முன்னிலைப் பன்மை வினைமுற்றாகும்.

## படர்க்கை வினைமுற்று

குயிலன் லண்டனுக்குச் சுற்றுலாச் சென்றான்.
கொற்றவை தமிழ்த்திறன் போட்டியில் பங்குபற்றுவாள்.
தமிழ்ப்பள்ளியின் ஆண்டுநிறைவு விழாவிற்குப் பலர் வந்திருந்தனர்.
குரங்கு மரத்தில் தாவிப் பாய்கிறது.
பறவைகள் நிரைநிரையாகப் பறக்கின்றன.

குயிலன், கொற்றவை, பலர், குரங்கு, பறவைகள் என்பன படர்க்கைப் பெயர்கள். இப்படர்க்கைப் பெயர்களுக்கேற்ப முறையே சென்றான், பங்குபற்றுவாள், வந்திருந்தனர், பாய்கிறது, பறக்கின்றன ஆகிய படர்க்கை வினைமுற்றுகள் பயனிலைகளாக சொல்லியங்களிலே இடம்பெற்றுள்ளன.

சென்றான் - படர்க்கை, உயர்திணை, ஆண்பால், ஒருமை வினைமுற்று.

பங்குபற்றுவாள் - படர்க்கை உயர்திணை, பெண்பால், ஒருமை வினைமுற்று.

வந்திருந்தனர் - படர்க்கை, உயர்திணை, பலர்பால், பன்மை வினைமுற்று.

பாய்கிறது - படர்க்கை, அ;றிணை, ஒன்றன்பால், ஒருமை வினைமுற்று.

பறக்கின்றன - படர்க்கை, அறிணை, பலவின்பால், பன்மை வினைமுற்று.


ஈழம் (இலங்கை)
காங்கேசன்துறை
யாழ்ப்பாணம்
பூநகரி
ஆனையிறவு
கிளிநொச்சி
முல்லைத்தீவு
தலைமன்னார்
பனங்காமம்
கொக்கிளாய்
மன்னார்
அரிப்பு
வவுனியா
திருகோணமலை
தம்பலகாமம்
கொட்டியாரம்
கந்தளாய்
அநுராதபுரம்
கற்பிட்டி
வாகரை
சிலாபம்
கற்குடா
பொலநறுவை
மட்டக்களப்பு
மாத்தளை
புத்தளம்
கல்முனை
கண்டி
நீர்கொழும்பு
அம்பாறை
பதுளை
கொழும்பு
திருக்கோயில்
மொறட்டுவா
பொத்துவில்
இரத்தினபுரி
பெந்தோட்ட
அம்பாந்தோட்டை
மாத்தறை




வளர் தமிழ் 12
பாடநூல்

வளர் தமிழ் 11
பாடநூல்

வளர் தமிழ் 10
பாடநூல்

வளர் தமிழ் 9
பாடநூல் | எழுதுதல்

வளர் தமிழ் 8
பாடநூல் | எழுதுதல்

வளர் தமிழ் 7
பாடநூல் | எழுதுதல்

வளர் தமிழ் 6
பாடநூல் | எழுதுதல்

வளர் தமிழ் 5
பாடநூல் | எழுதுதல்

வளர் தமிழ் 4
பாடநூல் | எழுதுதல்

வளர் தமிழ் 3
பாடநூல் | எழுதுதல்

வளர் தமிழ் 2
பாடநூல் | எழுதுதல்

வளர் தமிழ் 1
பாடநூல் | எழுதுதல்

வளர் தமிழ் பாலர் நிலை
பாடநூல் | எழுதுதல்

வளர் தமிழ் மழலையர் நிலை
பாடநூல் | எழுதுதல்